# அம்ருதா

**Amrudha Tamil Monthly**

Volume 18 Issue 4 November 2023 Rs.25

ஆண்டு 18 இதழ் 4 நவம்பர் 2023 ரூ.25




**கவிதை**

வைதீஸ்வரன்

ரமேஷ் பிரேதன்

ரவி சுப்பிரமணியன்

அருள்ஜோதி முரளிதரன்

**சிறுகதை**

எம்.டி.வாசுதேவன் நாயர்

அமுதா ஆர்த்தி

ராம் முரளி

# சப்தமற்ற இரண்டாம் மொழி

நோபல் விருதாளர் **ஜான் போஸ்** நேர்காணல்

## காதை பிளக்கும் அபாய சத்தம்

பிரபு திலக்

ஆண்டு 18 இதழ் 4

# அம்ருதா

நவீன கலை இலக்கிய சமூக மாத இதழ்

நவம்பர்-2023 விலை ரூ. 25

கௌரவ ஆசிரியர்
**திலகவதி**

ஆசிரியர்
**பிரபு திலக்**



**அம்ருதா**
#5, 5வது தெரு, சோமசுந்தரம் அவென்யூ
சக்திநகர், போரூர், சென்னை-600116
தொலைபேசி: -044 - 2435 3555, 94440 70000
மின்னஞ்சல்: info.amrudha@gmail.com
இணையம்: www.amruthamagazine.com

Published by Prabhu Thilaak
No. 5, 5th Street
Somasundaram Avenue
Shakthi Nagar, Porur
Chennai - 600 116

And Printed by A. Chandran on behalf of AMRUDHA
Ayyanar Offset, No. 10 Subbarao Nagar
Choolaimedu, Chennai - 600 094

Owner and Editor: Prabhu Thilaak

• அம்ருதா, ஒயிட் லோட்டஸ் தனியார் குழுமத்தின் ஓர் அங்கம்

# இந்த இதழில்...

# காதை பிளக்கும் அபாய சத்தம்

**பிரபு திலக்**

சமீபத்தில் மத்திய மாசுக்கட்டுப்பாட்டு வாரியம் (CPCB) நடத்திய ஆய்வுகளின்படி இந்தியாவிலே அதிகம் ஒலி மாசு சென்னையில்தான் பதிவாகியுள்ளது. இது நமக்கு ஒரு எச்சரிக்கை மணி. சென்னையின் நெருக்கமான கட்டிடங்கள், கட்டுமானப் பணிகள், மெட்ரோ ரயில் மற்றும் மழை நீர் வடிகால் பணிகளால் சாலைகளின் அகலம் குறைந்துள்ளது, மக்களின் அன்றாட வாழும் முறைகள் போன்றவற்றால் கடந்த ஒன்றிரண்டு ஆண்டுகளாகவே ஒலிமாசு அதிகரித்துக்கொண்டே வருகிறது. என்றாலும், சென்னையில் மட்டுமல்லாமல் மற்ற நகரங்களிலும் பல பகுதிகளில் கிராமங்களிலும்கூட இது இன்று ஒரு முக்கிய பிரச்சினை.

பொதுவாக, ஒலியின் தீவிரம் டெசிபல்களில் (dB) அளவிடப்படுகிறது. மனிதக்காது கேட்கக்கூடிய மிகமெல்லிய ஒலி 1 dB ஆகும், அதே போல் மனிதன் கேட்பதற்குப் பாதுகாப்பான அளவுகளாக 50 முதல் 55 டெசிபல்களை உலக சுகாதார நிறுவனம் நிர்ணயித்துள்ளது. 85 டெசிபலுக்கு மேல் சென்றால் அது மனிதனுக்கு ஆபத்தை ஏற்படுத்தும் அளவுகளாக கருதப்படுகிறது.

இதுபோல், நம் மத்திய அரசின் மாசு கட்டுப்பாட்டு வாரியமும் ஒலி மாசுவுக்கு தர அளவினை நிர்ணயித்துள்ளது. அதன்படி குடியிருப்புப் பகுதிகளில் பகலில் 55 டெசிபிலும் இரவில் 45 டெசிபிலும், மார்க்கெட் போன்ற கமர்ஷியல் பகுதிகளில் பகலில் 65 டெசிபிலும் இரவில் 55 டெசிபலும், தொழிற்சாலை பகுதிகளில் பகலில் 75 டெசிபிலும் இரவில் 65 டெசிபிலும் இருக்கலாம் என்றும் நிர்ணயித்துள்ளது. ஆனால், சென்னையில் இந்த இடங்களில் எல்லாம் நிர்ணயிக்கப்பட்ட அளவைவிட அதிகமான சத்தமே உள்ளது என்கிறது மாசு கட்டுப்பாட்டு வாரியம்.

இருபது ஆண்டுகளுக்கு முன் அண்ணா பல்கலைக்கழகம் சென்னையில் ஒலி மாசு அளவீடு செய்தபோது அதன் அளவீடு 60 டெசிபில்தான் இருந்தது. அதுவே 2000ஆம் ஆண்டு 75 டெசிபிலாகவும் இப்போது 85 டெசிபிலாகவும் உயர்ந்துள்ளது. காலை எட்டு மணி முதல் பத்து மணி வரையிலும் மாலை 6 மணி முதல் எட்டு மணி வரையிலும் 85 டெசிபில் அளவு ஒலி மாசு என்பது சாதாரணமாகிவிட்டது. ஒரு தொழிற்சாலையின் ஒலி மாசுவிற்கு நிகரான அளவு இது என்பது குறிப்பிடத்தக்கது.

காதுகளில் துல்லியமான சின்ன ஒலிகளை கேட்பதற்கு இன்னர் ஹேர் செல்ஸ், 100 டெசிபெலுக்கு மேற்பட்ட அதிக சத்தத்தை கேட்பதற்கு அவுட்டோர் ஹேர் செல்ஸ் என்று இரண்டு வகையான ஹேர் செல்ஸ்கள் இருக்கிறது. அதிக ஒலிகள் ஏற்படுத்தும் அதிர்வுகளால் இவைகள் பாதிக்கப்பட்டாலும், எதிர்பாராத நேரத்தில் திடீரென தாக்கும் ஒலி மாசினாலும் கேட்கும் திறனை உடனே இழக்க நேரிடலாம். குறிப்பாக, 65-70 டெசிபல் சத்தத்தை சில மணி நேரம் தொடர்ந்து கேட்டு வந்தால் அது நமக்கு எரிச்சலூட்டும் இரைச்சலாக மாறி விடுகிறது. இதுவே 85 டெசிபல் சத்தத்தை இரண்டு மணி நேரத்திற்கும், 100 டெசிபல் சத்தத்தை 15 நிமிடங்களும், 120 டெசிபல் சத்தத்தை 2 நிமிடங்களும் கேட்டல் அது நம் காதுகளின் கேட்கும் திறனைப் பாதிக்கும்.



ஒலி மாசினால் பாதிக்கப்படும் குழந்தைகள் சரியாக செய்யக்கூடிய ஒரு செயலை தவறாக செய்ய ஆரம்பிக்கும் வாய்ப்புகள் அதிகம்.

85 டெசிபில் ஒலி மாசில் வருடம் முழுவதும் வேலை பார்ப்பவர்களுக்கு காது கேளாமை ஏற்பட்டு விடும் ஆபத்து இருக்கிறது.

சாலைகளில் அதி அவசரமாக செல்லும் வாகனங்கள் எழுப்பும் ஒலியால் நமது உடம்பில் உடனடியாக இரத்த அழுத்தம் கூடி இதயத்தை பாதிக்கச் செய்யும். இரைச்சல் சத்தத்தை நம் காதுகள் கேட்கும் பொழுது அதிக அழுத்தம், இரத்த அழுத்தம், செவி கேளாமை, தூக்கமின்மை, சோர்வு ஆகியவை ஏற்படுகிறது. அதிலும் குறிப்பாக, சென்னையில் கட்டுமானப் பணிகள், போக்குவரத்து, ஒலிபெருக்கி பயன்பாடு போன்றவற்றால் மக்களின் தூக்கமின்மையும் அதிகரித்துள்ளதாக தெரிவிக்கிறது புள்ளி விவரங்கள்.

அதிக ஒலி மாசிற்கு உள்ளாகுபவர்களுக்கு மாரடைப்பு வருவதற்கான வாய்ப்புகள் அதிகம் என்கிறது ஒரு ஆய்வு.

எனவே, வெறும் சத்தம் என்ன செய்துவிடும் என அலட்சியமாக இருக்காமல் ஒலி மாசை குறைக்க நாம் நடவடிக்கைகள் எடுக்க வேண்டும்.

தொழிற்சாலை இயந்திரங்கள், அலுவலகங்களில் பயன்படுத்தப்படும் கருவிகள், வீட்டு உபயோக பொருட்கள், கட்டிட பணிகள், மின் விசைகள், ஒளிபரப்புக் கருவிகள், ஒலிபெருக்கி, ஆடல் பாடலுக்கான பொழுதுபோக்குச் சாதனங்கள் என இரைச்சல் உண்டாவதற்கு பல காரணிகளாக இருந்தாலும், சென்னை நகரத்தின் 60-70% இரைச்சலுக்குக் காரணமாக இருப்பது வாகனப் போக்குவரத்து தான். ஆம், சென்னையின் வாகனங்கள் தான் இந்நகரின் ஒலி மாசிற்கான முக்கியக் காரணம்,

வெளிநாடுகளில் பின்னால் வரும் வாகன ஓட்டி ஹாரன் அடித்தால் முன்னால் செல்லும் வாகன ஓட்டி தவறு செய்வதாக அர்த்தம். ஆனால், சென்னையில் முன்னால் செல்பவர் தவறே செய்யாமல் இருக்கும்போதும் பின்னால் வருபவர்கள் வீணாக ஹாரன் அடித்து டென்ஷனை ஏற்றுகிறார்கள்; தனக்கும் ஏற்றிக்கொள்கிறார்கள்.

சிக்னலில் சிவப்பு விளக்கு எறிவது நின்று செல்வதற்காகத்தான். ஆனால், சிக்னல்களில் பச்சை விளக்குக்காக காத்திருக்கும்போதும் ஹாரன்களை விடாமலும் விட்டுவிட்டு ஒலிப்பவர்கள் இருக்கிறார்கள். நம்மில் பலரிடமும் தெரியாமலேயே ஒட்டிக்கொண்ட மோசமான பழக்கம் இது. இது மாற வேண்டும். அவசியமாக இருந்தால் மட்டுமே ஹாரன் ஒலியை எழுப்ப வேண்டும் என்பதை அனைவரும் பின்பற்ற வேண்டும்.

திருமண நிகழ்ச்சிகளின் அதிக ஒலியால்

(தொடர்ச்சி 27ஆம் பக்கம்)

# ஜான் போஸ்

**ஒரே வாக்கியத்தில் 800 பக்கங்களை அடக்கிய நோபல் பரிசு நாவலாசிரியர்**

**ஸிந்துஜா**

கலை, கடவுள், குடும்பம், இளம்பருவம், இருமைக்கும் ஊழ்வலிக்கும் இடையே வெளிவர முயற்சிக்கும் நம்பிக்கை ஆகியவற்றைச் சார்ந்து எழுந்துள்ள சுமார் எழுபது படைப்புகளை ஜான் போஸ் உருவாக்கியுள்ளார். நாடகங்கள், நாவல்கள், கவிதைத் தொகுப்புகள், கட்டுரைகள், சிறார் இலக்கியங்கள், மொழிபெயர்ப்புகள் என்று பரந்துபட்ட வெளியில் அவரது எழுத்துலகம் நடமாடுகிறது. அவருடைய படைப்புகள் சுமார் நாற்பது மொழிகளில் மொழிபெயர்க்கப் பட்டிருக்கின்றன.

நார்வேயைச்சார்ந்த அறுபத்தியாறுவயதுநிரம்பிய ஜான் போஸ் ஆரம்பத்தில் ஒரு கிடார் வாசிக்கும் கலைஞனாகத்தான் தன்னை அடையாளப்படுத்திக் கொள்ள வேண்டும் என்று விரும்பினார். ஃபிடில் கூடக் கற்றுக்கொண்டார். ஆனால், வாழ்வின் திசை மாற்றிவிடும் போக்கில் அவர் பனிரெண்டு வயதிலிருந்தே எழுத ஆரம்பித்து விட்டார். இளம் வயதில் தன்னை மார்க்சிஸ்ட்டாகவும் நாத்திகனாகவும் அறிவித்துக் கொண்டார். ஒரு சமயம் அவர் தன்னை ஹிப்பி என்றும் அழைத்தார். அப்போது அவர் சமூகம் நிலைநாட்டியிருந்த வரம்புகளை மீறும் மனப்பான்மையுடன் வளைய வர முயன்றார்.

அவரது ‘சிவப்பு, கறுப்பு’ என்னும் முதல் நாவல் அன்றைய நார்வேயின் வழக்கமான யதார்த்த, சமூகக் கதைகளுடன் இயைந்து போகாது, மொழியின் செழுமைக்கும் கதைக் கருவை விட நடைக்கும் முக்கியத்துவம் கொடுத்து வெளிவந்தது. நாடகங்களில் அவர் கவனம் சென்ற பின்னர், உலகப் புகழ்பெற்ற பத்தொன்பதாம் நூற்றாண்டைச் சேர்ந்த நார்வேக்காரரான இப்சனின் நாடகங்கள் மேடையேறின அளவுக்கு ஜான் போஸின் நாடகங்கள் அரங்கேறின. அவர் இரண்டாம் இப்சன் என்று அழைக்கப்பட்டார். அவரது எழுத்தில் சமகால எழுத்தாளர்களான தர்ஜே வேசா, சாமுவெல் பெக்கெட், பெர்னார்ட், டிராக்கி ஆகியோரின் தாக்கம் காணப்பட்டது.



ஜான் போஸின் தலைசிறந்த நாவலாகக் கருதப்படும் ‘செப்டாலஜி’ ஏழு பாகங்களை எண்ணூறு பக்கங்களில் ஒரே வாக்கியமாகக் கொண்டு வெளி வந்து உலகைப் பிரமிக்க அடித்தது.

முதுமையில் அஸ்லே என்னும் ஓவியன் - மனைவியை இழந்தவன் - நார்வேயின் தெற்குக் கடற்கரைப் பகுதியில் வசிக்கிறான். ‘நாம் யார்? இந்த வாழ்க்கையை ஏன் வாழ்கிறோம்? ஏன் மற்றொரு வாழ்க்கையை வாழாமல்?’ என்ற கேள்விகளில் விடை தேடுகிறான். அவன் இருக்கும் இடத்திற்குச் சற்றுத் தள்ளியுள்ள பெர்ஜென் நகரத்தில் அஸ்லே என்னும் மற்றொரு ஓவியன், மனைவியை இழந்தவன், குடிகாரன் வசிக்கிறான். இந்த இரண்டு அஸ்லேக்களும் ஒருவரேதான். ஒரே வாழ்க்கையை இரண்டு விதமாக வாழ்கிறார்கள். சாவு, காதல், நம்பிக்கை அவநம்பிக்கை ஒளி, இருள் என்று அவர்கள் இருத்தலியலின் அடிப்படைக் கேள்விகளுடன் சிந்திக்கிறார்கள். வாழ்க்கை என்னும் ஆழ்கடலின் கண்டறிய முடியாத ஆழத்தை ஒரு மந்திரவாதியைப் போல், ஹிப்னாடிசக்காரனைப் போல் கண்டுபிடித்துவிட அலைகிறார்கள்.

தனக்கு நோபல் பரிசு கிடைத்ததைக் கேட்டு ஜான் போஸ் சொன்னது: “எனது மட்டற்ற மகிழ்ச்சியுடன் பயமும் சேர்ந்துகொள்கிறது. வேறு எந்தவிதப் பிரதிபலனையும் பாராமல் இலக்கியமே முதலும் கடைசியுமான குறியென்று உருவாக்கப்படும் இலக்கியத்தை இப்பரிசு அடையாளம் கண்டு கௌரவிக்கிறது.”

ஜான் போஸின் வாழ்க்கையையும் வாக்கினையும் வெளியுலகின் முன் வைக்கும் நேர்காணல் இனி...

# சப்தமற்ற இரண்டாம் மொழி

**ஜான் போஸ்**

**நேர்கண்டவர்கள்:**
**ரீனே வெர்டிக்ட், எமில் ரூதோட**

**தமிழில்: ஸிந்துஜா**

மூன்று பாகங்களை உள்ளடக்கிய 'செப்டாலஜி' (Septology) என்னும் உங்கள் நாவல் சமீபத்தில் வெளிவந்துள்ளது. ஒரு கமா, முற்றுப்புள்ளி எதுவும் இல்லாமல் முழுப் புத்தகமும் வெளியாகியிருக்கிறது. இது ஒரு வித்தியாசமான வாசக அனுபவத்தைத் தரும் என்று நீங்கள் நினைக்கிறீர்களா?

இந்த நாவலை முழு நிறைவு பெற்ற ஒரு புதினமாகத்தான் எழுத நினைத்து ஆரம்பித்தேன். பின்னர் என் பதிப்பாளர்கள் கூறியதை ஏற்றுக்கொண்டு ஏழு பிரிவுகள் அடங்கிய மூன்று நாவல்களாக எழுதினேன். தனித்தனியான பாகங்களாக அமைக்கப்பட்டிருந்தாலும், மூன்றுக்கும் பொதுவான ஒரு சரடில் நாவல் இயங்குகிறது. முதல் பிரிவு எழுப்பும் கேள்விகளுக்கு விடை உங்களுக்கு ஏழாம் பிரிவில் கிடைக்கும். தனியாக உதிரிகளைப் போல் காட்சியளிக்கும் பிரிவுகள் வேறுபட்ட பாகங்களில் ஒன்று சேர்ந்துகொள்கின்றன. ஒருவர் முதல் இரண்டு பிரிவுகளை மட்டும் படித்து நிறுத்திக்கொள்ள முடியும்; அல்லது கடைசி இரண்டு பிரிவுகள் மட்டும். இப்படி யிருந்தாலும் உங்கள் வாசிப்பு அனுபவம் பூரணத்துவம் நிரம்பிய ஒரு புத்தகத்தைப் படித்த நிறைவைக் கொடுக்கும். ஆனால், என்னைப் பொறுத்தவரை இந்தப் பிரிவுகள், பாகங்கள் எல்லாம் இணைந்த ஒரு முழு படைப்பைத்தான் நான் எழுதியிருக்கிறேன்.

உங்களின் மற்றைய கதாபாத்திரங்களைப் போல செப்டாலஜியில் கதை சொல்லியாக வரும் அஸ்லே பெரும்பாலும் பயணத்தில் இருக்கிறான். பிரயாணம் என்பது ஒரு வகையில் ஒருவர் தன்னை உணர்ந்துகொள்ளும் வாய்ப்பைத் தருவதாக எடுத்துக்கொள்ள முடியும். அதே சமயம் அது குறிக்கோளற்று அலைவதையும் சுட்டிக்காட்டும் ஆபத்து இருக்கிறது. இது ஒரு எதிர்மறை வியாக்கியானத்துக்கு இட்டுச் செல்லக்கூடும். உங்களைப் பொறுத்தவரை எப்படி எடுத்துக்கொள்கிறீர்கள்?

நான் உட்கார்ந்து எழுத ஆரம்பிக்கையில் ஏதாவது நடக்க வேண்டும் என்ற எதிர்பார்ப்பில் எழுதுவதில்லை. என்ன நடக்க வேண்டுமோ அது நடக்கிறது. இதை நீங்கள் எப்படி வேண்டுமானாலும் அர்த்தப்படுத்திக் கொள்ளலாம். இதை விளக்குவது என் வேலையல்ல என்றே நினைக்கிறேன். நான் ஒரு எழுத்தாளன். அவ்வளவுதான். என் வியாக்கியானம் உங்களுடையதை விட மதிப்புக் குறைவுதான் (சிரிக்கிறார்). ஆனால், நான் நன்றாக ஒரு படைப்பைச் சாதித்தால் அப்போது அதற்கு ஒரு அர்த்தம் உண்டு என்றும் அது ஒரு செய்தியைச் சொல்ல விழைகிறது என்றும் கூறத் துணிவேன். சாதாரண வார்த்தைகளில் என்னால் கூறி விட முடியாது. உங்களுடையது போலவே எனது யூகமும் இருக்கும்.

நீங்கள் ஒரு கட்டுரையில் மொழியை அடக்க முயற்சித்து மொழியைத் தாண்டிச் செல்ல வேண்டும் என்றும் அப்போது வித்தியாசங்கள் எதுவுமற்று இறைவனைத் தரிசிக்க முடியும் என்றும் எழுதியிருக்கிறீர்கள். மொழியின் கட்டுப்பாட்டிலிருந்து விலகும் போது நாம் தெய்வீகத் தன்மைக்கு அருகில் சென்றுவிடலாம் என்று கூறுகிறீர்களா?



கடவுள் என்னும் வார்த்தையை உபயோகிக்க நான் மிகவும் தயங்குகிறேன். எப்போதாவதுதான் இறைத்தன்மை பற்றிப் பேசுகிறேன். அப்போதும் என் எழுத்து என்று வரும் போது பேசுவதில்லை. கடவுள் என் பேச்சின் எல்லைக்கு அப்பால் வெகு தூரத்தில் இருப்பவர் (சிரிக்கிறார்). நான் நன்றாக எழுதும்படியான ஒரு வாய்ப்பு கிடைக்கையில் அங்கே இரண்டாவதாக மௌனம் நிரம்பிய ஒரு மொழியைக் கேட்கிறேன். இந்த மௌன மொழி கதையை அல்ல, அதைத் தாண்டிச் செல்வதை நீங்கள் கேட்க முடியும். மௌன மொழி, பேசுகிறது! என்னைப் பொறுத்தவரை இந்தக் கட்டம்தான் என் படைப்பைச் சிறந்ததொரு ஆக்கமாக நிலைநிறுத்த முடியும் என்று நான் உறுதியாக நம்புகிறேன்.

**செப்டாலஜியின் ஏழு பிரிவுகளையும் ஒரே வாக்கியத்தில் அமைத்திருக்கிறீர்கள். இதை பற்றி என்ன சொல்கிறீர்கள்?**

நான் எழுதும் எதுவும் அதைச் சார்ந்த உலகுடன் தொடர்பு உடையது. நிர்ணயிக்கப்பட்ட அதன் விதிகளின் அடிப்படையில் என் எழுத்து இயங்குகிறது. ஆகவே இம்மாதிரி உலகில் நான் உள்ளிருந்து தான் பணியாற்ற வேண்டும். எழுதும் போது இடைவேளை ஓய்வு என்று நான் எடுத்துக்கொள்ளும் பட்சத்திலும் அவ்வுலகிலிருந்து என்னை முற்றிலும் விடுவித்துக்கொள்ள முடியாது. ஒத்திசைவான லயத்திலிருந்து நான் வெளி வருவதில்லை. இதை விவரிப்பது கஷ்டமான காரியம்தான். ஆனால், அதன் ஓட்டத்துடன் நான் பயணிக்கிறேன்.

என்னுடைய 'யாரோ வரப் போகிறார்' என்னும் பிரபல நாடகத்தை நான்கைந்து தினங்களில் எழுதி முடித்துவிட்டேன். எழுதிய பிறகு எந்த மாற்றத்தையும் நான் செய்யவில்லை. எப்போதும் என் எழுத்து என்பது இப்படித்தான். செப்டாலஜி வேறு விதமாக அமைந்து விட்டது. வியன்னாவுக்கு வெளியே நானும் என் மனைவியும் ஹெயின்பர்க் என்னுமிடத்தில் வசித்தோம். இரவு முழுவதும் எழுதினேன். ஒவ்வொரு தினமும் மாலை ஐந்து மணியிலிருந்து மறுநாள் காலை ஒன்பது மணி வரை. பிறகு படுக்கச் செல்வேன். ஒரு மணி நேரத் தூக்கம். மதிய வேளைகளில் நான் எழுதுவதில்லை.

**உங்கள் எழுத்து மிக மெதுவாக நகர்கிறது என்று சொல்கிறார்கள். எங்களுக்கோ பெரும்பாலான உங்கள் எழுத்துக்கள் அப்படியில்லை என்று தோன்றுகிறது. இதை பற்றி உங்கள் கருத்து என்ன?**

நான் ஒரு கவிஞனாகவும் நாவலாசிரியனாகவும் தான் என் பயணத்தை ஆரம்பித்தேன். திடீரென்று

நாடங்கங்கள் எழுதும் ஆசை எனக்கு ஏற்பட்டது. பதினைந்து வருடங்கள் எனக்கு நாடகங்கள் எழுதுவதில்தான் மிகுந்த ஈடுபாடு இருந்தது. இது எனக்கே ஆச்சரியமூட்டிய விஷயம். ஒரு சவாலாக ஏற்றுக்கொண்டு சாதித்தேன். பெரும்பாலும் கோடைகளில்தான் நாடகங்களை எழுதினேன். வருடத்தின் மீதமுள்ள நாள்கள், பயணம் செய்வதிலும் நாடகங்களைக் காண்பதிலும் நேர்காணல்கள் கொடுப்பதிலுமாகக் கழிந்தன.

திடீரென்று ஒரு நாள் போதும் என்று பயணங்களை நிறுத்தினேன். குடிப்பதை நிறுத்தினேன். இம்மாதிரி பல விஷயங்களை நிறுத்தினேன். நான் ஆரம்பித்த இடமான - கவிதை, கட்டுரை, கதைகளை மறுபடியும் எழுத ஆவல் பிறந்தது. முதலில் 'விழித்தல்' என்னும் படைப்பை எழுதி முடித்தேன். பிறகு சற்றுக் காலம் எதுவும் எழுதாமலிருந்தேன். ஒரு மாதிரி வலிமையற்றவனாக என்னை உணர்ந்தேன். எழுத்து என்பதே அறிமுகமற்ற பிரதேசத்தில் செய்யும் பயணம்தானே? ஆனால், அதற்கு நான் வலிமையற்றவனாக உணர்ந்து என்ன பிரயோஜனம்? அந்தத் தனித்த உலகில் பிரவேசிக்க, உள்ளே சென்று மாய்ந்து கிடக்க திடகாத்திர மனமல்லவா வேண்டும்? மறுபடியும் தொடர்ந்து எழுத ஆரம்பித்தேன்.

என் எழுத்து நடை மெதுவாக இருக்கிறது என்றால் அதற்கு என்னையேதான் குற்றம் சாட்டிக்கொள்ள வேண்டும் (சிரிக்கிறார்). நாடகங்களிலிருந்து கட்டுரை, கவிதை, கதை ஆகியவை வேறுபட்டிருக்க வேண்டும் என்று அவதானித்தேன். என் நாடகங்கள் குறும் படைப்புகள். அவற்றை முயல்வதற்கு உக்கிரமாக வேலை செய்யும் மனநிலை தேவை. நாடகத்தில் உங்கள் இஷ்டப்படி சாவதானமாக உரையாடிக் கொண்டிருக்க முடியாது. ஆனால், நாடகம் தவிர என் மற்றைய எழுத்துக்களில் நான் சொல்ல விரும்புபவற்றை மிகுந்த நிதானத்துடன் அலசலுடன் எழுதுவது என் வழக்கம். மொழி அமைதியாகப் பக்கங்களில் இறங்க வேண்டும். செப்டாலஜியில் இதை நான் சாதித்திருப்பதாக நினைக்கிறேன்.

**செப்டாலஜியில் கதைசொல்லி ஒரு பாலுறவு காட்சியைப் பார்ப்பதாக வருகிறது. ஆனால், கற்பனையாக. நீங்கள் உங்கள் மனதில் இம்மாதிரி நிகழ்ச்சியை நினைத்துப் பார்த்ததுண்டா? பார்க்கக் கூடாத காட்சி என்று உங்கள் மனம் சொன்னாலும் அம்மாதிரிக் காட்சியை காணும் ஆர்வம் தவிர்க்கப்பட முடியாததாக உணர்ச்சியில் கலந்திருந்ததா?**

ஓ, இருந்ததே! ஆனால், எப்போதும் என்று சொல்ல முடியாது. கதையில் விளையாட்டு மைதானத்தில் அந்த பாலுறவு காட்சி வருகிறது. அதை எழுதிய அன்றும் இன்றும் சந்தோஷமாகவே உணர்கிறேன். கதாநாயகனான அஸ்லே, அவனது இளம்பிராயத்து அஸ்லேயும் அவன் மனைவியும் பலவருஷங்களுக்கு முன்பு உடலுறவு கொண்ட காட்சியைக் காண்கிறான். கதாநாயன் தன்னை வேறொருவனாகப் பாவித்து அக்காட்சியைக் காண்பதாக எழுதியிருக்கிறேன். கதைசொல்லி அவர்கள் இருவரையும் சந்தித்துப் பேசுகிறான். செப்டாலஜி, காலத்தின் ரேகைகளை அழித்து ஒன்றிணைந்த நிலையில் வாழ்க்கையை நிறுத்தும் ஒரு கட்டத்தைக் காண்பிக்கிறது.

ஐந்தாவது பிரிவிலோ அல்லது ஆறாவது பிரிவிலோ அஸ்லே ஒரு கார் தெருவில் செல்வதை ஜன்னல் வழியாகப் பார்க்கிறான். முன்பொரு நாள் காரில் தன் ஓவியங்களை எடுத்துக்கொண்டு அஸ்லே பெர்ஜன் நகரத்துக்குச் சென்றதை இப்போது இவன் பார்க்கிறான். இத்தருணம் வாழ்க்கையில் முழுமை பெற்ற ஒரு தருணம். நாவலே ஒரு முக்கிய தருணம்தான்.

**நீங்கள் எப்போதும் நீனாஸ்க் மொழியில்தான் எழுதுகிறீர்கள். ஒருபொழுதும் பூக்மால் மொழியை உபயோகித்ததில்லை. நீனாஸ்க்கில் மட்டுமே எழுதுவதற்கு ஏதாவது அரசியல் காரணங்கள் உண்டா?**

அதெல்லாம் ஒன்றும் இல்லை. அது என்னுடைய மொழி. நான் பள்ளியில் சேர்ந்த நாள் முதல் பள்ளியை விட்டு வெளியே வரும் வரை கற்றதெல்லாம் இந்த மொழியில்தான். ஒரு எழுத்தாளனாக அது எனக்குப் பயனுள்ளதாக இருக்கிறது. அது வணிக மொழியாக ஒரு பொழுதும் உபயோகிக்கப்படவில்லை. உண்மையில் அது பெரும்பான்மையான கல்விக்கூடங்களில், இலக்கியத்தில், தேவாலயங்களில் பயன்படுத்தப்படவில்லை. பூக்மாலைப் போலன்றி அதிகம் பேர் இந்த மொழியை உபயோகிக்காததும் என்னைக் கவர்ந்துவிட்டது என்று நினைக்கிறேன். ஜில்ஸ் டெல்சும் ஃபிலிக்ஸ் கட்டாரியும் எழுதிய ஒரு புத்தகத்தின் பெயர் 'Kafka: Towards a Minor Literature'. அதைப் படித்த பின் நான் நீனாக்ஸில் எழுதுவது காஃப்கா எதிர்கொண்ட சூழலை ஒத்திருந்தது போல உணர்ந்தேன்.

**செப்டாலஜியில் கதைசொல்லி ஜெர்மானிய கலைஞனும் சித்த புருஷருமான மாஸ்டர் எக்கார்ட் பற்றி அதிக அளவில் பேசுகிறான். உங்களைப் போன்ற இன்றைய எழுத்தாளர்கள் மீது எக்கார்ட் மிகுந்த செல்வாக்கு உடையவராக இருக்கிறார். எதனால் உங்களுக்கு அவர் மீது ஈடுபாடு ஏற்பட்டது?**

1980களில் மாஸ்டர் எக்கார்ட்டைப் படிக்க ஆரம்பித்தேன். அது மிகவும் சிறப்பான அனுபவம். என் பல்கலைப் படிப்பு முடிந்த பின்னர் அவரையும் மார்ட்டின் ஹைடக்கரையும் (ஜெர்மனியத் தத்துவஞானி) படித்தேன். எக்கார்ட்தான் என்னை மிகவும் பாதித்த எழுத்தாளர். அவரது பார்வை தனிப்பட்டதும் அவருக்கு உரித்தானதுமானது. என் இளம் வயதில் நான் ஒரு முட்டாள்தனமான



மார்க்சியவாதியாகவும் நாத்திகனாகவும் இருந்தேன். இது பொதுவாக அந்த வயதில் இளைஞர்கள் மீது படர்ந்திருக்கும் வியாதிதான். எழுத ஆரம்பித்த பின்தான் எனக்குப் புலப்படாத மாயம் ஒன்று என்னைப் பின்னிருந்து இயக்குவதை உணர்ந்தேன். இந்த எழுத்து எங்கிருந்து வருகிறது? நிச்சயமாக இங்கிருந்து அல்ல (இதயத்தைச் சுட்டிக் காண்பிக்கிறார்). இல்லை, இது அங்கிருந்து வெளி யிலிருந்து வருகிறது.

ஒரு மனிதனாக இன்று நான் கடவுளை நம்புகிறேன். கடவுளை நம்புபவனாக என்னை அடையாளம் காண்கிறேன். அவர் அங்கும் இங்கும் எங்கும் இருப்பவர்தான். ஆனால், எக்கார்ட் போல எனக்குப் பிடிவாதமான கோட்பாடுகள் கிடையா.

என்னுடைய இந்த உணர்வுகளை யாருடனாவது பகிர்ந்து கொள்ள வேண்டும் என்ற விருப்பம் ஏற்பட்டது. எனவே இறைவழிபாட்டு நண்பர்கள் அடங்கியக்வாக்கர்ஸில்சென்றுசேர்ந்துகொண்டேன். இந்தக் குழுவில் உங்களுக்கு ஏதாவது சொல்ல வேண்டும் என்று தோன்றும் தருணமெல்லாம் அதைப் பகிர்ந்துகொள்ளலாம். சொல்ல ஒன்றும் இல்லையென்றால் சும்மா இருக்கலாம். ஒரு கட்டத்தில் இது எனக்குத் தேவையற்றது என்று தோன்றிவிட்டது. என் எழுத்தே ‘அமைதிக் கூட்டங்’களுக்கு நிகரானது என்று எனக்குத் தோன்றியதும் காரணமாயிருக்கலாம். நானே எனக்கான வழிபாட்டு முறைகளை அடக்கிய க்வேக்கர் என்று உணர்ந்தேன்.

பிறகு சில காலம் எழுத்தில் மட்டும் என் கவனத்தைச் செலுத்தினேன். 1980களின் நடுவில் ஒரு கத்தோலிக்கத் தேவாலயம் நடத்திய இறை வணக்க நிகழ்ச்சிக்குச் சென்றேன். அதை நான் விரும்பியதால் கத்தோலிக்கனாக மாறுவதற்கான ஒரு பயிற்சியில் சேர்ந்தேன். இதற்கும் பல வருடங்கள் கழித்து நான் கத்தோலிக்கனாக மாறினேன். எக்கார்ட் இல்லாவிட்டால் இது எனக்கு நிகழ்ந்திருக்காது. அவர் கத்தோலிக்கராகவும் ஞானியாகவும் விளங்கினார்.

**நீங்கள் உங்களைக் கத்தோலிக்கராக, புனித எழுத்தாளராக நினைக்கிறீர்களா?**

எனது ஏழாவது வயதில் உயிர் பிரிந்து விடும் நிலைக்கு ஒரு விபத்தைச் சந்தித்தேன். என்னை அப்போது நான் வெளியிலிருந்து பார்ப்பது போல ஒரு உணர்வு தோன்றியது. நான் தங்கியிருந்த மருத்துவமனை இருந்த இடத்தில் பரவியிருந்த வெளிச்சம், அமைதி, மனமகிழ்ச்சியை ஊட்டும் இயற்கையின் அழகு இவையெல்லாம் என்னை வெகுவாகப் பாதித்தன. சாவுக்கு அருகில் சென்ற அந்தத் தருணம்தான் என்னைப் பின்னாளில் எழுத்தாளனாக்கியதுஎன்றுநினைக்கிறேன். அவ்வாறு நேர்ந்திராவிட்டால் இன்று நான் இம்மாதிரி நிலையை அடைந்திருக்க மாட்டேன். அவ்வளவு ஆழமான வடுவை ஏற்படுத்திய அனுபவம். இந்த உணர்வை நான் மார்க்சிஸ்ட்டாக இருந்த நாள்களில் வெகுவாக மறுதலிக்க முயன்று தோற்றேன்.

என் எழுத்துதான் என் மனநிலையை மாற்றியது என்று சொல்ல வேண்டும். நான் கத்தோலிக்க இறை வணக்கத்தை விரும்பினாலும் என்னை வெகுவாகக் கவர்ந்தது என்னவோ மரபுவழித் திருச்சபையின் இறை வணக்கமே.

**சக எழுத்தாளர்கள் தாங்கள் மெய் யியல் புனைவுகளை எழுதுவதாகக் கூறிக்கொள்கிறார்கள். இது பற்றி உங்கள் அபிப்பிராயம் என்ன?**

எனக்கும் பின்நவீனத்துவ எழுத்தாளன், மினிமலிஸ்ட் என்ற அடைமொழிகள் தரப்பட்டுள்ளன. ‘மெதுவான உரைநடைக்காரன்’ என்ற பட்டத்தையும் கூட. என்னை யாரும் எதுவாகவும் அழைக்க வேண்டியதில்லை. நான் என்னைக் கிறிஸ்துவனாக அறிவித்துக்கொள்கிறேன். ஆனால், அதுவும் கஷ்டமாகத்தான் எனக்கு இருக்கிறது. அது ஒரு குறுகிய வாதம் போலாகிக் காணப்படுகிறது. ஒரு விதத்தில் நான் மினிமலிஸ்ட்; இன்னொரு விதத்தில் நான் பின்நவீனத்துவவாதி - ஏனென்றால் எனக்குத்

தெரிதாவைப் பிடிக்கும்! என்ன வேண்டுமானாலும் அழைக்கட்டும். ஆனால், என் எழுத்து 'அதுமாதிரி இருக்கிறது' என்று குறிப்பிடப்படுவதை நான் விரும்பவில்லை.

**உங்களின் மாற்றம் அஸ்லேயினுடையதா?**

இப்போதெல்லாம் உங்கள் அனுபவங்களை உங்கள் எழுத்தில் கொண்டு வருவதும், நடப்புக்கு அருகே பிரதிபலிப்பதாகக் காட்டிக்கொள்வதும் பிரபல உத்திகளாகி விட்டன. ஆனி எர்னாக்சின் படைப்புகளைப்போல. அவருடைய 'ஆசை' என்னும் குறுநாவலை சமீபத்தில் படித்தேன். அது எனக்குப் பிடித்திருந்தது. அது நல்ல படைப்பு. ஆனால், என்னைப் பொறுத்தவரை என் அனுபவங்களை அப்படியே என் எழுத்தில் கொண்டு வர இயலாது. ஏனென்றால் எழுத்து என்பதே ஓர் பரிணாம வியக்தி. என் எழுத்தின் மூலம் என் உலகிலிருந்து வேறுபட்ட இன்னொரு பிரபஞ்சத்தைப் பார்க்கிறேன். இருக்கும் இவ்வுலகிலிருந்து தப்பி வெளியேறிச் செல்ல எழுத்து உதவுகிறது. எழுத்தின் மிகப் பெரிய சாதனையே அதுதான். நான் என்னிடமிருந்து வெளியே போய் என்னைப் பார்க்க விரும்புகிறேன். இருக்குமிடத்தில் அமிழ்ந்துகொண்டு பேசுவதற்கு அல்ல.

என் வாழ்க்கையை நான் எழுத உபயோகிக்கிறேன் என்பது உண்மைதான். நான் சொல்வது என்ன என்று எனக்குத் தெரிகிறது. இருந்தாலும் செப்டாலஜி ஒரு கண்டுபிடிப்பு - இவ்வளவுக்கும் நான் ஒரு சித்திரக்காரனல்ல. என் வாழ்க்கையை உபயோகிக்கையில் நான் படித்து அறிந்தவைகளை எழுத விரும்பவில்லை. ஒவ்வொரு செயலுக்கும் பரிணாம வளர்ச்சி இருக்கிறது. நான் எழுதுகையில் என் அனுபவங்கள் ஒன்றுமில்லாமல் போகின்றன. தட்டையாகக் காட்சியளிக்கின்றன. என் அனுபவங்களுக்குச் சிறகுகள் கிடையா. ஆனால், என் எழுத்து சிறகடித்துப் பறக்க வேண்டும் என்று விரும்புகிறேன். என் எழுத்து சுயசரிதையின் நிழல் அல்ல. மாறாக நான் எழுதுவது புனைவுகளை மட்டுமே.

**ஆனால், நீங்கள் எழுதுவது சுயபுனைவுதான் என்று கூறுகிறார்களே?**

சிலர் அம்மாதிரி நினைத்துக்கொண்டு படிக்கிறார்கள். என் வாழ்க்கையைப் பற்றிக் கொஞ்சமாவது அறிந்திருந்தால் அம்மாதிரிக் கூற மாட்டார்கள். நான் ஒரு தாயைப் பற்றி எழுதினால் அது என் அம்மாவைப் பற்றி எழுதியிருக்கிறேன் என்று நினைக்கிறார்கள். ஆனால், இது உண்மை அல்ல. ஒருக்காலும் அம்மாதிரி நான் எழுத மாட்டேன். நான் அம்மாதிரி செய்ய அனுமதிக்கப்படவில்லை. மற்றொருவரின் வாழ்க்கையை என் கதையில் கொண்டு வர என்னால் இயலாது. சில குணாம்சத்தைச் சாயலாகக் கொண்டு வரலாம். ஆனால், அது பரிணாம வளர்ச்சியை சுட்டிக் காட்டுவதாக இருக்க வேண்டும். சுயபுனைவில் ஒருவித நெறிமுறை தவறிய அம்சம் அடங்கியுள்ளது.

**மறுபடியும் நீங்கள் ஏன் நாடகம் பக்கம் திரும்பினீர்கள்?**

செப்டாலஜியை எழுதி முடித்த பின் நாடகம் ஒன்று எழுத வேண்டும் என்று அடக்க முடியாத ஆவல் எழுந்தது. மிகப் பெரிய புத்தகம் ஒன்றை எழுதிய பின் ஒருவித வெறுமை உங்களைச் சூழ்ந்து கொள்கிறது. அப்போதுதான் நாடகம் எழுதினால் என்ன என்று நினைத்தேன். 'பெருங்காற்று' என்னும் அளவில் சிறிய நாடகத்தை எழுதினேன். அதை எழுதி முடித்த போது அடுத்த ஒன்று மனதில் தயாராக இருந்தது. இன்னும் பிரசுரத்துக்கு அனுப்பாத நான்காவது நாவல் கூடத் தயாராகி விட்டது. இப்போது நான் என் மேஜை மீது முகத்தைக் கவிழ்த்து கொண்டுதான் உட்கார்ந்திருக்கிறேன். எதிர்காலத்தில் முன்பைப் போல அதிக நாடகங்கள் எழுதப் போவதில்லை, எப்போதாவது தோன்றினால் ஒழிய.

**செப்டாலஜியில் நீங்கள் 'இலக்கியத்தில் அழகாகத் தென்படுவது ஓவியத்தில் அலங்கோலமாக இருக்கிறது. ஏனெனில் இலக்கியம் அடக்க முடியாத அவ்வளவு அழகைத் தன்னுள் தேக்கியிருக்கிறது' என்கிறீர்கள். இலக்கியத்துக்கு அளவற்ற அழகு என்று ஒன்று இருக்கிறதா?**

ஆம், அவ்வாறுதான் நினைக்கிறேன். நீங்கள் எல்லாவிதத்திலும் சரியான கவிதை ஒன்றை எழுதுகிறீர்கள். அதைப் படிக்கும் போது அதன் அழகு உங்களைத் தாக்குகிறது. ஆனால், அதே சமயம் ஒரு எழுத்து புத்திசாலித்தனத்துடன் காணப்பட்டாலும் ஆன்மாவை கொண்டிரா விட்டால் அதை உங்களால் ரசிக்க முடிவதில்லை. விளம்பரங்களில் காணப்படும் சமச்சீரான முகங்களை எனக்குப் பிடிப்பதில்லை. ஒரு அழகான முகம் என்பதே சற்றுக் கோணலான சமாச்சாரம்தான். இலக்கியத்திலும் கலையிலும் அழகு என்பது கோணலில் தென்படுகிறது.

**எங்களுக்கு இந்த வாய்ப்பைக் கொடுத்ததிற்கு மிகவும் நன்றி.**

உங்களுடன் பேசியது எனக்கு மகிழ்ச்சியைத் தந்தது. உங்களுக்கு வாழ்க்கையில் அமைதியும் எல்லா நலங்களும் விளையட்டும்.

**(தொடரும்)**

**"ஸிந்துஜா"** <weenvy@gmail.com>

---

ரினே வெர்டிக்ட், பெல்ஜிய பல்கலைக் கழக முனைவர் பட்ட ஆராய்ச்சியாளர்

எமில் ரூதோட், பெல்ஜிய எழுத்தாளர்


World class service for Design & Construction of Precast Buildings
We thank all our customers for their trust & confidence endowed upon us. Its our mission to continually strive to provide cost-effective & high quality PRECAST products
European Technology
Modern Construction
TEEMAGE
4 PRECAST FACTORIES
15 CRANES + 2 tower cranes
50 LAKHS SQ.FT CONSTRUCTED
Class 1A contractor of CPWD, SPL class contractor in R&B Andhra,
executed precast construction for CRPF, NBCC, NPCIL, DMRC, ISRO
150 PROJECTS COMPLETED
350 ENGINEERS
2000 EMPLOYEES
School in Coimbatore
25,300 Sq.ft
completed within 60 days
Commercial Mall
2,25,000 Sq.ft
completed in 120days
Hostel Building
26,000 Sq.ft
completed in 70 days
Housing for CRPF
72 Days 1 Block
251 Houses 11 Months
EASIER
FASTER
BETTER
SERVICES OFFERED
•Design & Detailing
•Planning
•Production
•Transportation
•Erection
TYPES OF BUILDING
•Commercial
•Industrial
•Institutional
•Residential
•Multi level-Car Parking
TEEMAGE
Corporate Office :
6/35, College Road, 1st Cross Street, Tiruppur - 641 602.Tamilnadu. India. Ph : 0421 2240488.
82204 55555, 82200 51777
email : sales@teemageprecast.in
marketingteemage@gmail.com
web : www.teemageprecast.in
4 Precast Factories Pan India
Coimbatore | Delhi | Hyderabad | Chennai

# இழுபறி

## வைதீஸ்வரன்



பிறந்தவுடன் ஞானியான
குழந்தை முகமென விடிந்த
வானம்.
கல்லா... கனிவா என முகத்தையும் கையையும்
மாறி மாறிப் பார்த்து
சந்தேகமாக ஆடும் நாய்வால்.
குழாயின் உள்வட்டத்தில்
காற்றுக்கும் நீருக்கும்
கடும் விகிதாச்சாரப் போட்டி
முடிவற்று.
நேற்று நடந்ததை மறந்து
இன்று சிரிக்கலாமாவென்ற
சிக்கலில்
அடுத்த வீட்டுக்காரன் முகம்.
செடி முனையில் மொட்டு
இன்னும் பாதிக்கனவில்.
வாழ்வதா.... சாவதா... என
மலையுச்சியில்
கேட்டு நிற்பவர் கேள்விக்கு
பாதிவெளியில் தொங்கும்
பதில்
காலண்டரைக் கிழிக்காவிட்டாலும்
காலம் உருளும் என்றாலும்
பழைய தேதியை நம்பி ஏமாறும்
பாமர சுகம்...
மழைமேகம் பார்த்து
இடுக்கிக் கொண்டு போன குடையை
வெய்யிலுக்கு விரித்து வியர்த்து வந்த
கிழவனின் ஆயாசம்...

நினைப்புக்கும் நடப்புக்கும்
ஓயாத சித்து விளையாட்டு
வெற்றி தோல்விக்கு
இடையில் ஆயுளுக்கும்
ஊசலாடும் அன்றாட மனிதன்

**வைதீஸ்வரன்<vydheesw@yahoo.com>**

# இரவுக்கு அம்மாவின் சாயல்

அமுதா ஆர்த்தி

ஓவியம்: ரம்யா சதாசிவம்

காணாமல் போனவர்களை ராஜாவூர் தாத்தா கண்டுபிடித்துத் தருவதாக சுஜியிடம் தோழி ஜெஸிகா சொன்னாள். ஊருக்குள் ராஜாவூர் தாத்தா வருகிறார் என்றவுடன் குழந்தைகளுக்கெல்லாம் ஏக குஷி.

இதுவரையிலும் பார்த்திராத தாத்தாவைப் பார்ப்பதற்கு ஏழு வயது நிரம்பிய சுஜி ஆவலாக இருந்தாள். தாத்தா வரும்போது நிறைய ஆரஞ்சு மிட்டாய் பலூன்களும் வாங்கி வருவார். வருவதை எதிர்பார்த்தபடியே வீட்டுத்திண்ணையில் சுஜியும் ஐந்து வயதான தங்கையும் இருந்தார்கள். பல முறை ஊருக்குள் வந்துபோயிருக்கிறார். ஆனால், சுஜியின் வீட்டுப் பக்கத்தில் இன்றுதான் வருகிறார்.

ஆறடி உயரம் கொண்ட பருத்த உடல்வாகுடன், இரண்டு துணிப் பைகள் தோளில் தொங்க, கையில் ஒரு பையை பிடித்து, குச்சி ஒன்றை ஊன்றியபடி ஆறுபது வயதைக் கடந்த முதியவர் நடந்து வந்தார். அவரைச் சுற்றி சுஜியின் தோழிகள் வந்தவண்ணம் இருந்தார்கள். எல்லோர் கையிலும் ஒன்றிரண்டு ஆரஞ்சு மிட்டாய்கள் இருந்தன. பெரிய வட்டமான கண்ணாடி போட்டிருந்தார். கண்ணாடிக்குள் இரண்டு வாத்து முட்டைகள் நீரில் மிதப்பதைப்போல் கண்கள். அழுக்கடைந்த ஆடை. மூக்குக் கண்ணாடியைக் காதோடு சேர்த்து நூல் வைத்துக் கட்டியிருந்தார். உருண்டையான கைவிரல்களும் பெரிய பாதமும் தளர்ந்த நடையுமாக சுஜி வீட்டு நீண்ட வராண்டாவில் வந்து உட்கார, சுற்றி நின்ற குழந்தைகளை அருகில் அணைத்துக்கொண்டார்.



அடுத்த வீட்டுப் பாட்டி நரங்கியபடியே வந்து தாத்தாவை நலன் விசாரித்துவிட்டு, ஒரு செம்பு தண்ணீர் கொடுத்தாள். தாத்தா ஒரு வாரம் இந்த ஊரில் இருப்பதாகச் சொல்ல, சுஜி அருகில் நெருங்கிவரப் பயந்து ஓரமாக தன் தங்கையின் கையைப் பிடித்தவண்ணம் நின்றிருந்தாள். அதைக் கவனித்த தாத்தா இருவருக்கும் ஆரஞ்சு மிட்டாய் கொடுத்தார். இதுவரையிலும் முகர்ந்திராத வாசனையொன்று அவரிடமிருந்து வந்தது. அருகில் செல்லாமல் விலகியே நின்றாள். அடுத்த வீட்டு பாட்டி தாத்தாவோடு பேச்சுக் கொடுத்தாள்.

“வேலைக்குப் போன வீட்டாளுவ இன்னும் கொஞ்ச நேரத்துல வந்துருவாங்க. திண்ணையில ஒரு ஒறக்கம் போடும். ராஜாவூர்ல இருந்து நடவண்டியில



வந்துருப்பிய."

தாத்தா தலையை அசைத்தார். சுஜியும் அவள் தங்கையையும் பார்த்து பாட்டியிடம் கேட்டார்: "இதுக யாரு."

"இதுகளா... பேரபிள்ள மாரிதான். தள்ளையும் தவப்பனும் ஒவ்வொரு தெசையில போயிட்டாங்க. அந்தச் சின்னத ஆறு மாசத்துல போட்டுட்டு போயிட்டா தள்ளக்காரி. அப்பனப் பெத்தவதான் வளக்கியா."

"பாவம் இதுக. பாட்டிக்காரி வேலைக்குப் போயிட்டு வாரது வரைக்கும் பாத்துக்கிட்டேயிருக்கும்."

"எப்பவாச்சும் தகப்பன் வருவான். எதாவது வாங்கிப் போடுவான். அம்மக்காரி எதாவது கேட்டா கோபப்படுவான். அதுனால அவளும் எதுவும் கேக்கமாட்டா."

தாத்தா பையிலிருந்து ஊதா நிற பலூன் ஒன்றை ஊதி அவள் தங்கையிடம் கொடுத்தார்.

சரியாக பிடிக்க முடியாமல் பலூன் பறந்து மூச்சிழந்து கிழே விழுந்தது. பலூனைத் துடைத்து. ஊதி நூல் வைத்துக் கட்டி தங்கையின் கையில் கொடுத்தாள்.

தாத்தா கொண்டு வந்த பையிலிருந்து துணியை விரித்து, பையைத் தலையணையாக வைத்து சரிந்து படுத்தார்.

"எல்லாரும் போங்க சாயங்காலம் ஆறு மணிக்கு வாங்க" என பாட்டி சுற்றி நின்ற குழந்தைகளைத் துரத்தினாள்.

சுஜிக்கு அவள் தங்கையின் கையில் இருக்கும் ஆரஞ்சு மிட்டாயைத் தின்ன ஆசை. தங்கையிடம் இருந்து எதையாவது வாங்க வேண்டும் என்றால் ஒரு குறிப்பிட்ட தூரம் உன்னைத் தூக்கிச் சுமக்கிறேன் என்று சொன்னால் கொடுத்துவிடுவாள். சிறிது நேரம் மூச்சு இரைக்க தூக்கிச் சென்று மிட்டாயை வாங்கிக்கொண்டாள்.

சாயங்காலம் கலகலப்பும் சந்தோஷமும் குழந்தைகளிடம். அந்திக் கடைக்குப் போகும் பாட்டி சுஜிக்கும் அவள் தங்கைக்கும் பண்டம் வாங்கிக்கொண்டு வருவாள். சூடான மீன் குழம்பும் சோறும் கிடைக்கும். பாட்டி சமைக்கும் வரை

நிலா வெளிச்சத்தில் விளையாடலாம். இரவில் வீட்டுத்திண்ணைகளில் கூடியிருந்து பேசுபவர்களின் கதைகளைக் கேட்க ஆவலாக இருப்பாள்.

நீங்காத சந்தோஷத்தைக் கொடுத்தது இரவு. அம்மாவின் சாயல் இரவுக்கு.

பாட்டி வேலைக்குச் சென்ற பின்பு, பகல் அவளுக்குள் பசியும் தீரா வெம்மையோடு கூடிய தனிமையான தாகத்தை கொடுத்தது. யாருமற்ற ஊரில் தனித்துவிடப்பட்டோம் என்ற எண்ணம் அவளுக்குள் பயத்தையே உண்டுபண்ணின. அதனாலேயே எப்போதும் தங்கையை அணைத்தபடியே இருப்பாள். பள்ளிக்குச்செல்லும்போது பல நாட்கள் தங்கையையும் அழைத்துச்செல்வாள். சுஜியின் ஆசிரியர் தங்கையை வகுப்பறைக்குள் வர அனுமதிக்காத நாட்களில் பள்ளிக்கூட வராண்டாவில் அவளை அமர்ந்திருக்கச் செய்வாள். அவளுக்காகவே பள்ளிச்செல்லாத பல நாட்கள் உண்டு. ஊரே அமைதியாக இருக்கும்போது, எங்கேயோ முட்டையிட்டு கத்தும் பெட்டைக் கோழிகளின் சத்தம். கூடவே தனிமையின் அவகாசத்தை கூட்டிக்கொடுக்கும் உக்குலுவின் குரல். நரங்கி நடக்கும் கிழவியின் வெத்திலை இடிக்கும் சத்தமே ஊருக்கு உயிர் இருக்கு என்ற ஆறுதலைக் கொடுத்தது.

விடுமுறை நாட்களில் ஜெஸிகா வீட்டில் ஒன்று கூடி விளையாடுவார்கள். வீட்டைச்சுற்றி கொன்னைமரங்கள் காணப்படுவதால் அவர்கள் விளையாட இதமான சூழல் இருந்தது. விளையாட்டில் அதிகம் இடம்பெறும் கஞ்சியும் கறியும் விளையாட்டு. சமையல் செய்து சுஜி எல்லோருக்கும் பரிமாறுவாள்.

மதியம் எல்லோரும் அவரவர் வீடுகளுக்கு போய்விடுவார்கள். சுஜியும் அவள் தங்கையும் அங்கேயே வெகு நேரம் உட்கார்ந்திருப்பார்கள். சமைத்த மண்சோற்றையும் கறியாக மாறிய இலைதழைகளை பார்த்தவாறே.

ஜெஸிகாவின் இரண்டு அக்காக்கள் பெரியவர்கள். வீட்டில் உண்மையான சமையல் செய்யக்கூடியவர்கள். இவர்களோடு விளையாட வருவதில்லை. ஜெஸிகா வீட்டின் மீன் குழம்பு வாசனை சுஜியின் மனதிற்குள் புகுந்து ஏங்க வைக்கும். கொஞ்சமேனும் தனக்கு சாப்பிட தரமாட்டார்களா என அங்கேயே நிற்கும் சுஜியை, ஜெஸிகா, "போய் உங்க வீட்ல சாப்பிட்டு வா" என கதவடைப்பாள். வெகுநேரம் நிற்பதை கதவின் ஓட்டை வழியே பார்ப்பாள் ஜெஸிகா. இன்னும் நின்றால் விளையாட்டில் சேர்த்துக் கொள்ளமாட்டாள் என்றெண்ணிப் போய்விடுவாள், சுஜி.

காக்கை, கோழிகளை அவளுக்கு பிடிப்பதில்லை. ஆளில்லாத பகல் பொழுதுகளில் தங்கை ஆய் இருக்கும்போது சத்தமாக சுஜி அழுது விடுவதுண்டு. தங்கை ஆய் இருக்கும்போது வெளியே தள்ளிக்கொண்டு ரத்தம் சொட்டும் மூலத்தை என்னச் செய்வதென்ற அறியாமல் திகைத்து நிற்கும் பொழுதுகள். வெளியில் தள்ளிக்கொண்டிருக்கும் மூலத்தை கவனியாத நேரம் கோழிகள் கொத்திவிடும். சிலநேரங்களில் துரத்தி கொத்தும் காக்கையும். அப்போது கால்வழியே பாயும் இரத்தமும் மலமும்.

அருகில் நிற்கும் பூவரசன் இலையை எடுத்து கைபடாமல் உள்ளே அமுக்கிவிட்டால் சரியாகிவிடும் என்று பாட்டி சொல்லிக் கொடுத்திருந்தாள். சில நேரங்களில் பூவரசன் இலை கிடைக்கவில்லை என்றால் வாழையிலை எடுத்து தள்ளிவிடச் சொல்லுவாள் பாட்டி. கோபம் கொண்டு காக்கையும் கோழிகளையும் கல்லெடுத்து விரட்டி அடிப்பாள். தங்கையின் நிலையை பார்த்து வழிப்போக்கர்களாகப் போகும் சில பெண்கள் அவள் தாயைத் திட்டுவதுண்டு.

"கல் நெஞ்சுக்காரி பிஞ்சு பிள்ளையள தள்ளிட்டா போவா, என்ன மனசு வந்துச்சோ."

மெழுகுவர்த்தி ஏற்றி வைத்து கண்களை மூடி, பாசிமாலையை உருட்டியபடியே முணுமுணுத்தார் தாத்தா. அக்கம் பக்கத்து வீடுகளிலுள்ள பெண்கள் மற்றும் வயதானவர்கள் அவரிடம் ஆசி வாங்கிவிட்டு, தேங்காய் எண்ணெய், தண்ணீர் போன்றவற்றைக் கொண்டு வந்து ஜெபித்து வாங்கிச் செல்லுவார்கள். சிலரது நோய்களைப் பற்றியும் பேய்களைப் பற்றியும் சொல்லுவார். வயது வருவதுபோன்ற பெண் குழந்தைகளைப் பேய் பிடித்துவிட்டதாகச் சொல்லுவார். பாசிமாலையை வைத்து அவர்கள் மேனியெங்கும் தடவி விடுவார். சுஜி வீட்டுத் திண்ணையைக்காட்டி, "இந்த திண்ணையில் என்னோடு பெண் பிள்ளைகளை தூங்க வையுங்கள். இவர்களை இரவில் துரத்தும் பேய்களை கண்டறிந்து விரட்டுவேன்" என்றார்.

மறுநாள் காலையில் அவர் அருகில் படுத்திருந்த ஜெஸிகா மற்றவர்களிடம் சொன்னாள்: "அந்த தாத்தா என் தொடைகளுக்கு இடையில் மூத்திரம் விட்டார்." அதனால் ஊரைவிட்டு போகும்வரை தாத்தாவிடம் யாரும் நெருங்கவில்லை.

சுஜி மெதுவாக கேட்டாள்: "தாத்தா இந்த மாலையில் காணாமல் போன எங்க அம்மாவை கண்டுபிடிச்சி தருவீங்களா."

அவள் தலையில் கைவைத்து முணுமுணுத்து சொன்னார்: "உங்க அம்மா வரணும்னா அன்னா வானத்துல தெரியுதுல்லா நிலா, அது முழுசா தெரியும்போது கேளு. அதுதான் ஊரையெல்லாம் சுத்தி வருது. கண்டிப்பா கண்டுபிடிச்சிரும்."

அவளும் வானத்தை நோக்கினாள். நிலா



முழுமையாக இல்லை.

"ஏன் தாத்தா முழுசா எப்பத் தெரியும்?"

"இன்னும் நாலுநாள்ல தெரிஞ்சிரும். நீ எண்ணைக்கும் வானத்தப் பாரு. ஆனா... நீ அதோடு தனியாத்தான் பேசணும்."

மறுநாள் தாத்தா ராஜாவூர் போய்விட்டார். அவர்போன பிறகும் அவளுக்கு பிடிக்காத அந்த மணம் திண்ணையெங்கும் நிரம்பியிருந்தது. பலநாட்கள் முழுநிலவும் மேகமும் மறைந்து விளையாடியபடியே இருந்தது. எத்தனையோ முறை பார்த்தாலும் தாத்தா சொன்னபிறகு முழுநிலவு அவளுக்குள் நம்பிக்கையைக் கொடுத்தது.

முதல்முறை நிலவைப் பார்த்து அவளால் அழ மட்டுமே முடிந்தது. நிலவும் அவளும் நெருக்கம் கொண்டார்கள். அம்மாவை காண, நம்பிக்கை அவளுக்குள் ஆவலைத் தூண்டின. அம்மாவின் போட்டோ இருக்காவெனப் பாட்டியிடம் கேட்டாள்.

பாட்டி டிரங்கு பெட்டியில் இருந்து கருப்புவெள்ளைப் புகைப்படம் ஒன்றை எடுத்துக்கொடுத்தாள். அதில் அவளும் அப்பாவும் மட்டும் தெளிவாகத் தெரிந்தார்கள். அம்மாவின் முகம் மழைநீர் வழிந்து மறைந்திருந்தது.

எப்போதாவது வரும் அப்பாவை அம்மாவிடம் கூட்டிச் செல்லும்படியாக கேட்டாள். அதை காதில் வாங்கிக்கொள்ளாமல் போகும், "அப்பாவையும் காணாமல் போக வை" என்று நிலவிடம் பராதி சொன்னாள்.

சிறுமிகள் விளையாடும் டீச்சர் விளையாட்டு சுஜிக்கு பிடித்தமானது. அதில் ஆங்கில டீச்சராகிவிடுவாள். ஏன்னா ஆங்கில டீச்சர்தான் மூன்று மணிவாக்கில் தினமும் டீயும் பருப்பு வடையும் தின்பார். பாடத்தை கவனிப்பதைவிட பருப்பு வடையும் டீயும் எப்படி ருசித்து தின்கிறார் என்றே கவனிப்பாள். கீழே வடை விழுந்து விடாதபடி ஸ்டைலாக நின்று கடித்து மென்று டீயையும் உறிஞ்சிக்கொள்வார். அவளுக்குள்ளும் ஒரு ஆங்கில டீச்சர் வடை டீ குடிக்கத்தொடங்கி விடுவாள். பருப்பு வடையின் மொறு மொறுப்பு காதுக்குள் இறகு குடைவதுபோல் சத்தம். டீச்சர் தலையில் வைத்திருக்கும் வாடிய பிச்சிப்பூவின் வாசனையோடு பருப்பு வடையின் வாசனையும் வகுப்பறையிலேயே தங்கிப்போகும்.

விளையாட்டில் சுஜிக்குள் இருக்கும் ஆங்கில டீச்சர் ஒரு துண்டு சின்னக் கல்லும் சிறு மரக்குச்சி ஒன்றையும் வைத்து டீயும் வடையும் சாப்பிடுவதைப்போல் பாவனை செய்வாள்.

எப்போதாவாது வரும் அப்பா அவளைக் குளிக்க குளத்துக்குக் கூட்டிச் செல்வார். அவர் அழைத்துச் செல்லும் நேரம் மதியமும் இல்லாமல் மாலையும் இல்லாமல் இருக்கும். இடைப்பட்ட நேரம். அந்நேரம் கைலி மீன்களைப் பார்ப்பது அவளுக்குப் பிடிக்கும். குளிக்கச் செல்லும்போதே ஒரு பிடி சோற்றுப் பருக்கையை எடுத்துச் செல்வாள். ஒவ்வொரு பருக்கைக்கும் சண்டையிடும் கைலி மீன்கள் வெள்ளியைப் போல் பளபளத்து மினுங்கிக் கொண்டிருக்கும். ஆள்காட்டி விரல் அளவே வளரக்கூடிய கைலிமீன்கள் யாருக்கும் பயப்படாமல் தன் இஷ்டத்துக்கு கும்மாளமிடும். வாய்பிளந்து நீர் குடிக்கும் மீன்கள். சுலபமாக பிடிபடும்.

சோற்றுப் பருக்கைகள் காலியானதும் எச்சில் துப்பி விளையாடுவாள். வீடு திரும்பும் நேரம் அப்பாவின் கைகளைப் பற்றி, "ஒரே ஒரு தடவ அம்மாவ பாக்கனும்" என கெஞ்சுவாள். ஒருநாள், "சரி நாளைக்குக் கூட்டிட்டுப் போறேன்" என்றார்.

அன்றிரவு பிறை நிலவிடம் ரகசியமாக சொன்னாள்: "பாத்துக்கிட்டு வந்து உங்கிட்ட சொல்லுவேன்." தங்கையிடம் கூறினாள்:"அம்மாவை வீட்டுக்கு கூட்டிக்கிட்டு வருவேன். அப்போ நாம நல்லா சாப்பிடலாம். ஒன்ன கோழி காக்க கொத்தாது. தலவாரி பின்னிவிடுவாங்க. ஒனக்கு ஜட்டி வாங்கித் தருவாங்க. எப்பவும் ஒன்ன தூக்கி இடுப்புல வச்சுக்குவாங்க. முதல்ல நா மட்டும் போய்ப் பாத்துட்டு வாரேன்."

இடுப்புல வச்சிக்குவாங்க என்றதும் எதையோ புதிதாகக் கேட்பதைப் போல் அக்காவைப் பார்த்தாள். பாட்டி சலித்துக்கொண்டே, "கொப்பன் ஒரு ஏமாத்துக்காரப் பய. ஆமா இப்ப ஒடனே அடிச்சிபுடிச்சி ஓடி வந்துருவா கல் நெஞ்சுக்காரி."

பாட்டியின் வசவுகளைக் காதில் வாங்காமல் வீட்டின் மூலையில் பாயைச் சுருட்டி அதனுள் பதுங்கிக்கொண்டே, அம்மாவைப் பார்த்ததும் எப்படி கூப்பிடவேண்டும் என பயிற்சி எடுத்தாள். மெதுவாக "அம்மா..." அதற்குமேல் அந்த வார்த்தையில் உயிர் இல்லாமல் இருந்தது.

தோழிகள் எல்லோரிடமும், "நா எங்க அம்மாவ பாக்கப் போறேன்" என்றாள். அவள் அம்மாவைப் பார்க்க அவர்களும் ஆவலாகத்தான் இருந்தார்கள்.

அப்பா, அவளை சைக்கிளில் உட்கார வைத்து ஆற்றங்கரை வழியாகச் சென்றார். சைக்கிளின் முன் பையொன்றில் இரண்டு தேங்காய், கீரை, மீன் மற்றும் வாழைப் பழங்கள் இருந்தன. அவள் இதுவரையிலும் சாப்பிட்டிராத ஏத்தன் வாழைப்பழம். கொஞ்ச தூரம் சென்றதும் இறங்கியே இருவரும் நடந்தார்கள். வழியெங்கும் புன்னைமரப் பூக்களும் இளம் காய்களுமாக மரக்கிளைகளில் தொங்கின. ஒவ்வொரு மரங்களை எண்ணியே கைகளைக் காற்றில் அகல விரித்து நடந்தாள். செம்மண் தரை மழையில் சிறிது நனைந்திருந்தது. ஆற்றங்கரையில் உள்ள பல செம்மண் குடிசைகள் இடிந்து கிடந்தன. சில குடிசைகளில் தோள்பை மற்றும் பழைய இத்துப்போன குடை, துணிகள், கரையான் பிடித்துத் தொங்கிக்கொண்டிருந்தன. குடிசைகளுக்கு உள்ளும் புறமும் காட்டுச் செடிகள் வளர்ந்து அழகாகப் பூத்திருந்தன. பல வண்ண வண்ணத்துப்பூச்சிகள் பறந்தவண்ணம் இருந்தன. ஆற்றின் கரையோரம் விழுந்துக்கிடக்கும் புன்னக் காய்களைப் பாவடையில் சேகரித்தபடி நடந்தாள். ஆற்றில் வெள்ளம் இல்லை. மழை நீர் மட்டும் ஆங்காங்கே தேங்கி நின்றது. புன்னைக்காய்களை மறைவிடம் பார்த்துப் பதுக்கி வைத்தாள், வரும்போது எடுத்துக்கொள்ளலாமென்று.

அப்பா சைக்கிளை ஒதுக்கி விட்டுட்டு ஆற்றையொட்டிய திருப்பு வந்ததும். ஓட்டு வீட்டிற்குள் நுழைந்தார். தயங்கியவளாக சுற்றும் முற்றும் பார்த்து திண்ணையில் கால் வைக்க, உள்ளே இருந்து வெளுத்த தேகம் கொண்ட ஒல்லியான பெண் ஒருத்தி வெளியில் வந்தாள். சிரித்த முகத்துடன் சுஜியை அணைத்தபோது நிரப்பமுடியாத இடைவெளி இருந்தது. "அம்மாவ பாக்கனும்னு சொன்னா அதான் அழைச்சிட்டு வந்தேன்" என அந்தப் பெண்ணிடம் சொன்னார்.

பாட்டி சொன்னதை நினைத்துப் பார்த்தாள். வீட்டை ஒரு முறை சுற்றிப் பார்த்துவிட்டு வெளியில் வந்தாள். வீட்டில் விதவிதமான சமையல் நடந்தது. அந்த பெண் அவளுக்குக் கொலுசு வாங்கித் தருவதாகச் சொன்னாள். வெளியில் வந்து நின்ற சுஜியைப் பார்த்து பக்கத்துவீட்டு வயதான பெண் அழைத்து ரகசியமாகச் சொன்னாள்.

"ஏட்டி இது ஒனக்க அம்ம கெடையாது, கொப்பனுக்க கூத்தியா."

"அப்டின்னா?"

"மயிரு, வந்த வழியே வீடு போய் சேருட்டி. கொப்பன் ஒன்ன ஏமாத்தி கூட்டி வந்திருக்கான்."

எதுவும் சொல்லிக்கொள்ளாமல் வந்த வழியே திரும்பி நடந்தாள். பாதி வழி சென்றதும் அணை திறந்து ஆற்றில் தண்ணீர் பெருக்கெடுத்து வந்து கொண்டிருந்தது. ஓடும் ஆற்றை நின்று கவனித்தாள். தலை சுற்றுவதுபோல் இருந்தது. புது வெள்ளத்தில் குப்பை கூழங்களும் கசடுகளும் சவாரி செய்தன. மெதுவாக நடந்தவள், மறைத்து வைத்திருந்த புன்னக்காய்களை எடுத்து ஆற்றில் ஒவ்வொன்றாக வீசி எறிய அவை மிதந்து செல்லுவதைப் பார்த்தே நடந்தாள்.

ஆற்றை ஒட்டி இரண்டு சாலைகள் பிரிந்தன. எது வழியாகப் போக வேண்டுமெனக் குழம்பிய பின், இடதுபுற சாலையில் சென்று மெயின் ரோட்டைக் கடந்து ஊர் வந்தடைந்தாள்.

அன்று பாட்டி வேலைக்குச் செல்லவில்லை. தங்கை தூங்கிக் கொண்டிருந்தாள். நடந்தவற்றைச் சொல்ல, பாட்டி திட்டித் தீர்த்தாள். "அவனுக்க எளவுதான் தெரிஞ்சதாச்சே. பச்ச புள்ளைய தனியா விட்டுருக்கான், வரட்டு" என உறுமிக்கொண்டாள்.

தங்கையின் அருகிலேயே அவளும் படுத்து உறங்க. சில மணிநேரம் கழித்து வந்த மகனோடு சண்டை யிட்டாள். சிறிது நேர மௌனத்திற்கு பிறகு, "ஆத்துல அண தெறந்து விட்டுருக்கானுவ பயந்துட்டேன்" என்றார்.

சுஜியை எழுப்பி உட்கார வைத்து சொன்னார்: "கண்டிப்பா நாளைக்கு சாயங்காலம் போலாம், அவள பாக்க. பஸ் ஏறி டவுனுக்கு போறோம்."

பஸ்சில் போகலாம் என்றதும் புது உற்சாகம். அப்பாவின் மீதுள்ள கோபம் சற்றுக் குறைய, எங்கும் செல்லாமல் வீட்டிலேயே இருந்தாள்.

மறுநாள் சாயங்காலம் அவளை அழைத்துச் சென்றார். மாலைநேரம் மழைமேகம் சூழ சற்று வலுத்த காற்றும் வீசிக்கொண்டிருந்தது. காற்று அவளின் பாவாடையில் நடனமாடியது. படிக்கட்டின் பக்கத்து இருக்கையில் இருந்தவாறே சக்கரங்களுக்கு இடையில் வேகமாக மறையும் தரையைப் பார்த்தவாறே

இருந்தாள். முகத்தில் மோதும் காற்றோடு பேசியது கூந்தல். நடுங்கும் சிறிய கைகளை இறுக்கமாகப் பொத்திக் கன்னத்தில் ஒத்திக்கொண்டாள். பஸ் நாகர்கோவில் பஸ்டான்டை வந்தடைந்தது. கடைகளில் வண்ண விளக்குகளின் அலங்காரம். புதிய நகரம் ஒன்றை கண்டுபிடித்தவளாக வியந்தாள்.

அவள் கைகளைப் பிடித்தவாறே அப்பா நடந்தார். எங்கிருந்தோ வந்த பருப்புவடையின் வாசனை ஆங்கில டீச்சரை நியாபகப்படுத்தியது. கடைகளை வேடிக்கைப் பார்த்த வண்ணம் நடந்தாள். அருகிலிருந்த ஒரு பெரிய ஹோட்டலுக்கு அழைத்துச் சென்றார். ஒரு சில இருக்கைகளே காலியாக இருந்தது. இரண்டு பருப்பு வடையும் இரண்டு சாயாவும் கேட்டார். சற்று நேரத்தில் வடை வந்தது. ஒரு வடையை பேப்பரில் வைத்துக் கொடுத்தார். அவள் அந்த பேப்பரை கீழே போட்டுவிட்டு வெறும் கையில் வடையை கமத்தி நிமிர்த்தி உற்று கவனித்தாள்.

சிறிது நேரம் கழித்து ருசித்துச் சாப்பிட்டாள். ஆனால், வடை சீக்கிரம் காலியாக கூடாதே என்ற ஏக்கமும் கூடவே வந்தது. மறுகையில் வடையை மாற்றிப் பிடித்து கையை மோப்பம் பிடிப்பதை அப்பா கவனித்தார். சாப்பிட்டுக்கொண்டே இருந்தபோது ஒரு துண்டு வடை கீழே விழுந்தது. அந்த ஒரு துண்டை சட்டென குனிந்து எடுக்க, அப்பா கையை தட்டிவிட்டு எடுக்கக் கூடாது என மிரட்டினார். கீழ் விழுந்த வடைத் துண்டுலேயே கண். அதைக் கவனித்த அப்பா, “இன்னொரு வடை வேணுமா” என்றார்.

அவள் தலையசைத்ததை அவர் கண்டு கொள்ளவில்லை. அவராகவே சொன்னார்: “போகும்போது வாங்கிக்கலாம் வா.”

சாயா குடித்து கிளம்பும் போது அவர் பார்க்காத நேரம் அந்த ஒரு துண்டு வடையைக் கையில் எடுத்து மறைத்து வைத்தாள்.. இரண்டு குறுக்குச் சாலையை கடந்து ஒரு பெரிய கட்டிடம் கறுப்பு கண்ணாடி போட்டிருந்தது. அதன் வாசலின் முன்னே பல வாகனங்கள் விடப்பட்டிருந்தன.

மருத்துவமனை என பெரிய எழுதுப் பலகை ஒன்று மாட்டியிருந்தது. வெள்ளுடை தரித்த பெண்கள் பரபரப்பாக இயங்கிக் கொண்டிருந்தார்கள்.

சுஜியை காத்திருப்பு அறையில் உட்கார வைத்துவிட்டு, ஒரு பெண்ணிடம் அம்மாவின் பெயரைச் சொல்லி கேட்டார்.

“ஓ கொஞ்சம் நேரம் உட்காருங்க.”

சிறிது நேரம் கழித்து வந்த பெண், “அவங்க மாடியில இருக்காங்க. இப்போ வந்துருவாங்க” என்றாள்.

எல்லோரும் ஒரே உடை தரித்தவர்களாக இருப்பதால் அவர்களின் முகங்களும் கூட ஒன்றுபோல இருப்பதாகவே சுஜிக்கு தோன்றின. காத்திருப்பு அறையில் சற்று பெரிய, அழகிய மீன்தொட்டி வைக்கப்பட்டிருந்தது. பாட்டி உலை வைக்கும்போது பானை குமிழி விடுவதைபோல் விட்டுக் கொண்டிருந்தது. மீன்கள் பல கலர் ஆடை உடுத்தி ஒய்யாரமாக வலம் வந்தன.

மீன்களைக் கண்டதும் சுஜி வந்தவேலை மறந்து அதிலேயே மூழ்கி இருந்தாள். யாரையும் அவள் கவனிப்பதாக இல்லை. கைலி மீன்கள் மேல் வந்து சட்டென நீரின் அடியில் சென்றுவிடும். இந்த மீன்களோ தனது அழகான ஆடையை நீரில் அலசி சமாதானமாக நீந்துகிறது. பல கலர்களில் நீந்தும் மீன்களைக் கைகளால் பிடிக்க முயற்சி செய்தாள். ஒரு பெண் ஓடிவந்து மீன் தொட்டியில் கை வைக்காமல் பாரு என்று அதட்டினாள். இன்னொரு பெண் இந்த புள்ள யாரு சிஸ்டர் என கேட்டாள். அருகில் வந்த அப்பா அவள் கைகளைப் பிடித்து இழுத்து, “இங்க நில்லு. அவ இப்ப வந்துருவா பாக்க வேண்டாமா” என கண்களை உருட்டினார்.

வெள்ளுடை தரித்த ஒருத்தி நீண்ட வராண்டாவில் தூரமாக வருவதைப் பார்த்து, “அன்னா வாறால்ல அவதான் உங்க அம்மா” என்றார். கையில் ஊசியும் பஞ்சும் இருந்தது. அருகில் வந்ததும் சுஜி அம்மாவின் முகத்தை பார்க்காமல் பாதத்திலிருந்தே கவனிக்கத் துவங்கினாள். அதற்குள் அம்மா சத்தமாக திட்ட ஆரம்பித்தாள்.

“ஏ ராஸ்கல் ஒன்ன இங்க யாரு வரச்சொன்னா. போயிரு நிக்காத. ஒனக்குத்தான் ஊரெல்லாம் பொண்டாட்டி இருக்காளே என்ன எதுக்கு பாக்க வந்த.”

அப்பா, சுஜியின் கைகளை பிடித்தபடி அமைதியாக நின்றார்.

“ஓ ஒனக்க பிள்ளையக் கூட்டிக்கிட்டு வந்து படம் காட்டுதியா? வேல நேரத்துல, ஆளுகள பைத்தியமாக்காத போ” எனக் கத்தவும், இரண்டு தாதிகள் வந்து, “ஐயோ பாவம் சிஸ்டர், அந்த பிள்ளய பாருங்க” என சமாதானம் சொன்னார்கள்.

காத்திருப்பு அறையில் இருந்து நோட்டு ஒன்றை எடுத்துக் கையெழுத்துப் போட்டுவிட்டு சுஜியைத் திரும்பிப் பார்க்காமல் சென்றாள்.

சுஜி, அப்பாவின் கைபிடியில் இருந்து நைசாக நழுவி ஓடிச்சென்று மீன்தொட்டிக்குள் கையைவிட்டு ஒழித்து வைத்திருந்த வடைத்துண்டை போட்டாள். வடைதுண்டு மிதந்து சென்று அடியில்போகும் போது மீன்கள் கொத்த வருவதைத் திரும்பித்திரும்பி பார்த்தே மருத்துவமனையை விட்டு வெளியேறினாள்.

அமுதா ஆர்த்தி <amuthaarthi7870@gmail.com>

# ரமேஷ் பிரேதன் கவிதைகள்

**ஓவியம்: நடேஷ்**



## 1. ஆமையும் தோழியும்

கடலில் தொலைந்தவன் தனக்கு
ஆமை வழிகாட்டிய
கதையைச் சொன்னான்
இடைமறித்துக் கேட்டேன்
அந்த ஆமையை எனக்கு
அறிமுகம் செய்வாயா?

கடலுடன்
வாழப் பழகியவனுக்குத்தான்
அந்தக் கதையில் வாழும் ஆமை
கட்புலனாகும்

உயிர்ப் பொருளின் கால அடுக்குகளை
அதைப் பற்றிய கதைகளின் வழியே
கடக்கும்போது
எதிர்பாராத ஓரிடத்தில்
அந்த உயிரியையே எதிர்கொள்வாய்
அந்த இடம்
நீராகவோ நிலமாகவோ
விசும்பாகவோ இருக்கலாம்
கடவுளைப் பற்றிய நம்பிக்கை இருக்கும்வரை
கடவுள் இருக்கும்

கதைக் கடலில்
ஒரே அலையின் தாவலில்
ஆமையைக் கைவிட்டு
கடவுளை எட்டிப் பிடித்தான்
நான் குழம்பிப்போனேன்

அந்த ஆமையை
உன் தோழிக்குத் தெரியும்
அதன் ஓட்டின் மேல்
உனது பெயரை
ஆணியால் எழுதிவைத்தாள்
அவளது கனவை ஊடுருவிப் பார்
முடியாவிட்டால்
அவள் தூங்கிக்கொண்டே பேசுவதை
நடுயிரவில் கண் விழித்துக் கேள்

ஆமை கடவுள் தோழி
முடிவில்லா கதையில்
தொலைந்துபோனவன்
கரையில் நின்று
கடலை வெறிக்கிறான்.

## 2. அரசியல் சொல்லாடல்

படமெடுக்கும் பாம்பைக்
கழுத்தில் சுற்றிய எனது கடவுளும்
தன்னைத்தானே சுற்றியப் பாம்பைத்
தனது படுக்கையாக்கிக்கொண்ட
உனது கடவுளும்
வாசல் அடைபட்ட இந்த அறைக்குள்
நம்முடன் இருக்கின்றனர்
திறந்து மூடயிருக்கும்
ஒற்றைச் சாளரத்தின் கதவிடுக்கில்
நசுங்கி நாறிக்கொண்டிருக்கிறது
இரண்டின் வாய்களிலிருந்துத் தப்பித்தக்
கொழுத்தப் பல்லி

இந்த நிலத்தின் அரசியல்
நம்மை இரண்டாகப் பிரித்து
எதிரெதிரே நிறுத்தியது



நம் இசைவின்றியே
அவற்றின் உறுப்பினராக்கப்பட்டோம்
அறைக்கு வெளியே
உடம்பில் போர்த்தப்பட்ட
தோலின் நிறத்தால்
ஒருவருக்கொருவர் வேறுபட்டோம்

நம்மில் செயல்படும் பேரரசியலின்
இருவேறு எடுத்துக்காட்டுகளூடாக
அறைக்குள் கட்டமையும் நுண்ணரசியல்
நம்மைப் புரட்டிப்போடும்போது
உனக்கு அடியில் நானும்
எனக்கு அடியில் நீயும்
பல்லிகளாகிறோம்

ஒன்றுபடுவதில் இல்லை
வேறுபடுவதில்தான்
விடுதலை
இனி, ஒவ்வொருவருக்கும்
தனித்தனி அறைகள்
கைக்குலுக்கிப் பிரிந்துவிட்டால்
ஒருவரையொருவர் கொல்லும்
இச்சையிலிருந்து வெளியேறலாம்
அவரவர் பசிக்கு
அவரவர் கடவுள் வளர்க்கும்
பாம்பை உண்ணலாம்.

## 3. இதுவரை அறிந்தவை

தலைமறைவு வாழ்க்கை கவித்துவமானது
எல்லாவற்றிலும் முன்நின்று
உன்னை விளம்பரப்படுத்தி விற்றுக்கொள்வதில்
சந்தை மதிப்பு ஏறும் இறங்கும்
கொடுப்பதற்கோ பெறுவதற்கோ
எதுவுமில்லாத வர்த்தகத்தில் ஈடுபடாமல்
தலைமறைவாக ஒதுங்கி நில்
அந்த நாள் கவித்துவமாக இருக்கும்

எந்நேரமும்
வெளிச்சத்தில் நிற்பதைத் தவிர்த்துவிடு
மறைவான உணர்வுகளுக்குக் கொஞ்சம்
இருட்டுத் தேவை
வாழ்வின் இருண்டப் பகுதிகளில்
பார்க்கத் தவறிய
சில விண்மீன்கள் தட்டுப்படும்

இரவில் வாழப் பழகியவருக்கு
வாழ்நாள் கூடும்
வேட்டை விலங்குகளின்

கூர்நோக்கு வசப்படும்
இரையே இறை என்னும்
உண்மை விளங்கும்

கலவிக்கு உகந்ததாக
இரவையும் இருட்டையும்
மனிதர் தேர்ந்ததில்
மறைக்கப்பட்ட கவித்துவம் புலப்படும்
அதை உன்னால் அறியமுடிந்தால்
பெண்மையை
உடம்புக்கு வெளியில் நிறுத்துவாய்

பெயரை மாற்றி அழைத்தாலும்
இரவுக்கும் பகலுக்கும்
தன்மை மாறாது
அவை நிலையானவை
உயிருள்ளவை நாளை உயிரற்றவை
வெளிச்சத்திலிருந்து வெளியே
இருட்டுக்கு வா
சினை வயிற்றுக்குள்ளிருக்கும்
பாதுகாப்பை உணர்வாய்.

## 4. மாயயெதார்த்தப் பறவை

நாள்தோறும் உச்சிப் பகலில்
தோட்டத்து வேப்பமரத்தின் அடிக்கிளையில் வந்தமரும்
எனக்குப் பழக்கப்பட்ட காகம்
இனி வராது

எனக்காக வந்து சிறிது நேரம்
என்னைப் பார்த்துச் செல்வதைப்
பழக்கமாகக்கொண்டிருந்த
அந்தக் காகம்
வருவதைத் தடுத்தது
நீ எனப் பிறர் சொல்வதை நம்பமுடியவில்லை

காகத்திற்கும் எனக்குமான பழக்கத்தில்
குடும்பவழி உறவின் தடம்
தென்படுவதைக் கண்டு
இனம்புரியாத பயம்
உன்னை ஆட்கொள்ள
இயற்கையுடன் இயைந்த
எனது நடவடிக்கை
என்னை உனக்கு அந்நியமாக்குகிறது

காணுமிடமெல்லாம் கறுப்புப் பறவை
உனது பால்மணம் மாறாத
வெள்ளை உள்ளத்தைக் கலங்கடிக்கிறது
உயிருள்ள ஒரு நிறத்திற்குக்
கறுப்பு எனப் பெயரிட்டு அழைப்பதை
ஏனோ வெறுக்கிறாய்

உனது தடை
அந்தக் காகத்திற்கு
என்மீது பரிவையோ கோபத்தையோ
உண்டாக்கியிருக்கலாம்
அதன் புரிதலில் நாமிருவரும்
வேறுவேறாகப் பொருள்படலாம்
பழக்கவழக்கங்களின்
எளிய மீறல்களைச்
சிக்கலானப் பிறழ்வுகளாகக் கற்பனைச் செய்து
அதில் சிக்கிக்கொள்வதில்
மனத்துக்கண் இன்பம் காண்பதாகக் கருதலாம்

இறப்பிற்குப் பிறகும் தொடரும் உறவுகளை
நாம் அஞ்சுகிறோம்
மனிதப் புனைவுகளைத்
தாங்கிப் பறக்கும் அந்தக் காகத்திற்குத் தெரியாது
தானொரு மாயயெதார்த்தப் பறவை
என்னும் செய்தி.

## 5. அரசியல் சொல்லாடல்

உனக்கும் எனக்கும் இடையே ஊடாடும்
குருதி உறவு மொழியாலன்றி பிறிதொன்றால்
இதுநாள்வரை விளையவில்லை
மொழியின் தொப்பூழ்க்கொடியை
முன்னம் பற்களால் கவ்வி
கோரைப்பற்களால் கிழித்துத் துணித்துவிட்டால்
நீயும் நானும் தனித்தியங்கத் தொடங்கிவிடுவோம்
மொழியை நம்மிலிருந்து வெளியேற்றும்போது
நாம் ஒருவரையொருவர் விடுதலைச் செய்கிறோம்
ஆம், மொழியே மாந்தர் விடுதலைக்கு
ஆகப்பெரும் தடை எனச் சொன்னால் சிரிக்கிறாய்

ஆண் எனச் சொல்லி வளர்க்கப்பட்டவன் நீ
பெண் எனச் சொல்லி வளர்க்கப்பட்டவள் நான்
நம் உடம்பின் புலன்கள் சொற்களாலானவை
பாலுறவு உறுப்புகளுக்குச் செம்மொழியில் சொற்களில்லை
எனவே, பால் வேற்றுமை அடையாள உறுப்புகளிலிருந்து
தலைமறைவாக வெளியேறுவது எளிது
நம்மைப் பின்தொடரும் சொற்களைச் சுட்டு வீழ்த்து
கொலைப்படுவதும் கொலைச்செய்வதும்
நாளையக் குமுகவிடுதலைக்கான முதலீடு

கலவிக்கு ஆயத்தமாகும் உடம்புகள்
இப்படி அரசியல் வயப்படுவது நமக்குப் புதிதில்லை
வன்புணர்ச்சிக்கு ஆளாகாத ஒருத்தியை
இன்றுவரை நான் சந்தித்ததில்லை
வன்புணர்ச்சியின் அரசியல் தொழிற்படாத
தேசிய இனம் இல்லை
பிரேதன், வருந்துகிறேன் ஆடையை அணிந்துக்கொள்
உள்ளம் பிறழ்ந்து உலர்ந்துவிட்டது
நாளை பார்த்துக்கொள்ளலாம் தோழா.

## 6. மதத்திற்கு வெளியில் நிற்பவள்

தனது குடிகள் பின்தொடராமல் கைவிட்ட கோயில்
தன்னை ஒரு குறுங்காட்டுக்குள் மறைத்துக்கொண்டிருந்தது
செவ்வகப் பாறைகளால் கட்டப்பட்ட
சுற்றுச்சுவர் சரிந்தப் பரப்பில்
படர்ந்துப் பரவிய முரட்டுக் கொடிகளை அகற்றி
அங்கே தனக்கொரு படுக்கையைச் சமைத்திருந்தான்
அவன் பார்வைக்கு அருகில் புதர் மண்டி
அரைகுறையாகத் துலங்கும்
தலையில்லாதச் சம்மணச் சிலை
இக்காட்டில் ஏதோவோரிடத்தில் மண்ணுக்குள் புதைந்து
வலி பொறுக்காமல் இமைகள் திறந்து கிடக்கலாம்
அதன் முகம்

முழுநிலா மாலையில்
அங்கே என்னை அழைத்துச் செல்வான்
விடியும்வரை பாறைப் படுக்கையில் கலந்துக்கிடப்போம்
தலையில்லா சிலை காவலிருக்கும்
நிலவின் ஒளி வழியும் கருங்கல் உடலில்
சுற்றியக் கொடிகள் படமெடுத்து நெளியும்

குடிகளின் மறதிக்குள்
பலியிடப்பட்ட கடவுளைக்
கலவியின் நிகழ்த்துக் கலைவழி
உயிர்த்தெழச்செய்யும் தொன்மைச் சடங்கு
நமது தாய் மதத்தின் அறநெறிகளை
மீட்டுருவாக்கம் செய்யும் தலைமறைவு நடவடிக்கை
பெண்ணே உனது கருமண்டலத்தில்
கடவுளை விதைக்கிறேன்

புணர்ந்துக்கொண்டே பேசுவான்
காமத்தின் அரசியல் சொல்லாடல்களை
எனக்குள் பதிவுசெய்வான்
கோயிலைத் தின்னும் காடு
விடியலின் நொடிதோறும்
பார்வையிலிருந்து மறைந்துகொண்டிருக்கும்
பரிதிமுன் அவனும் அற்றுப்போவான்

வெயில் சுடும் வெட்டவெளியில்
அம்மணமாக நிற்பேன்
முழுநிலா இரவின்
மறுநாள் பகலில்.

## 7. நீள்வட்டக்குளம்

தூங்கும்போது உற்றுப்பார்த்தேன்
ஆழிருட்டில் விண்மீன்கள் இடம்பெயர்ந்தன
திரியும்போது எனக்கு மீன் கண்கள்
உறங்கும்போது பூனையின் கண்கள்
வைத்தக் கண்ணை எடுக்காமல்
எந்நேரமும் என்னை உற்றுப் பார்த்தபடி இருக்கும்
நீ சொல்லித்தான் எனக்குத் தெரியும்
கனவு இல்லாவிடில் உறக்கத்திலும் வாழ்க்கை
உயிரோடு தொடர்வதை அறியாமலிருந்திருப்பேன்

போதை நொதிக்கும் தூக்கத்தின் சுவையில்
எறும்புகள் செத்து மிதக்கின்றன
மிச்சம் மீதி தேங்கிவிடாத மரணத்தின் முழுமை
வாழ்நாளெல்லாம் எங்கெங்கோ சுற்றித் திரிந்து
தொடங்கிய இடத்தில் வந்து முடியும் முழுமை
உறக்கத்திலிருந்து உறக்கம்வரை
மரணத்தில் என்னைச் சுற்றி வனையும் ஆதிப் பனிக்குடம்

தூங்கும் என்னை விடியும்வரை விழித்திருந்துப் பார்க்கிறாய்
உறக்கத்திற்குள்எனதுஇருப்புஎன்னவென்றுஅறியாதவன்நீ
அங்கே உனது அறிதலுக்கு அகப்படாமல்
மறைபொருளாக வாழ்ந்து முடிகிறேன்
தூக்கத்தின் இறைத்தன்மையை
அந்தந்த உடம்பு வழியேதான் உணர முடியும்

உறக்கத்தில் வாழத்தெரிந்தவருக்கு மரண அச்சம் இல்லை
இதுவே செல்வத்து ளெல்லாந் தலை
ஆழ்ந்தக் கலவியிலிருந்துப் பெருக்கெடுத்து
நிரம்பியத் தூக்கத்தில் மிதக்கிறேன்
மீன் கண்கள் நீந்துகின்றன
பூனைக்கண்கள் கரையிலிருந்துப் பார்க்கின்றன.

ரமேஷ் பிரேதன் <rameshpredan@gmail.com>

# 4

கடந்த ஐம்பது ஆண்டுகளில் தமிழ்க் கவிதையில் பெண் கவிஞர்களின்
பாடுபொருளும் பங்களிப்பும் குறித்த ஓர் அலசல்..

# காரைக்கால் அம்மையாரும் ஆண்டாளும்

**க்ருஷாங்கினி**

பக்தி காலத்தை ஆய்வு செய்தோமானால் நாயன்மார்களில் ஒரே ஒரு பெண்பாற் புலவரான காரைக்கால் அம்மையாரும் ஆழ்வார்களில் ஒரே ஒரு பெண்பாற்புலவரான ஆண்டாளும் வருகிறார்கள். வைணவத்தில் பன்னிரு ஆழ்வார்களில் ஆண்டாள் மட்டுமே பெண்; அவ்விதமே சைவத்தின் அறுபத்தி மூன்று நாயன்மார்களில் காரைக்கால் அம்மையார் மட்டுமே பெண். இவ்விருவரின் பாடல்களில் மிகச்சிறந்த உவமைகள், காதல் வர்ணனைகள், கனவுகள், தத்துவங்கள் என அனைத்தும் காணக்கிடைக்கின்றன. மிகச் செழுமையான மொழியில் இவர்களின் பாடல்கள் இருக்கின்றன. ஆனால், இவர்கள் இருவருடைய வாழ்க்கையிலும் இறைவனை அடைய எடுத்துக்கொண்ட பாதைகள் வெவ்வேறு. நேர் மாறானது.

முதலில் காலத்தால் முந்திய காரைக்கால் அம்மையார்...

காரைக்கால் அம்மையாரை அவருடைய சிவ பக்தி அவரைக் குடும்ப வாழ்க்கையிலிருந்து பிரித்து விடுகிறது. ஆனால், அவர் ஆண்டாளைப் போல இல்லாமல் கடவுளை கடவுளாகவே காண்கிறார். அவரது வாழ்க்கை வரலாறு நமக்கு சேக்கிழார் அருளிய திருத் தொண்டபுராணம் மூலம் தெரிய வருகிறது. அது அறுபத்து ஆறு பாடல்களில் சொல்லப்பட்டிருக்கின்றது. இளம் வயது முதலே சிவன் மீது நாட்டம் கொண்ட புனிதவதியார், இறைவனிடமிருந்து பெற்ற மாங்கனியின் காரணமாக, கணவன் மறுமணம் செய்துகொள்ள அவனை விட்டு விலகுகிறார். அம்மையார், சிவபக்தியில் திளைத்து சுடலையில் வாழ்ந்து பேயுருக்கொண்டு தலையால் நடந்து கைலாயம் அடைந்ததாக வரலாறு சொல்கிறது.

அவர் தனது முதல் பாடலிலேயே தம்மை ஒரு பெண் பேய் என்றே கூறிக்கொள்கிறார். தமது உடலை தசைப் பொதி என்றும் கணவனுக்காகவே இளமை தரித்திருப்பதாகவும் அதற்கு அர்த்தம் இல்லாமல் போனபின் தன்னை உருமாற்றிக் கொண்டதாகவும் கூட அவருடைய வரலாற்றிலிருந்து அறிகிறோம். அம்மையார் எழுதிய அல்லது நமக்குக் கிட்டிய பாடல்கள் மொத்தம் 143. இதில் குறிப்பாக எல்லோராலும் சிறப்பித்துப் பேசப்படுவது ‘அற்புத அந்தாதி’. இது மட்டுமல்லாமல் அவருடைய பல பாடல்கள் அந்தாதி வடிவிலேயே உள்ளன. திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகங்கள் என்ற நூலில் சுடுகாட்டு வர்ணனைகளும் அவற்றில் காணப்படும் சொற்களும் மிகவும் வீரியமுள்ளவைகளாகவும் காட்சிப்படுத்துதல் என்ற பாணியில் அமைந்ததாகவும் உள்ளன. அந்த சுடுகாட்டில் புலிதோல் போர்த்திய உடலில் சாம்பல் பூசிய சிவனை நம் மனதிற்குள் கொண்டுவருகிறார்.

‘புத்தி கலங்கி மதி மயங்கி இறந்தவரை புறங்காட்டில் இட்டு சந்தியில் வைத்து கடமை செய்து தக்கவர் இட்டதீசெந்தீ விளக்கா’ என சிவனைக் காட்சிப்படுத்துவது உள்ளச் சிலிர்ப்பை ஏற்படுத்துவதாய் உள்ளது. சிவன் கழுத்தில் இருக்கும் பாம்பையும் தலையில் வசிக்கும் கங்கையையும் நகைச்சுவையாக, தத்துவார்த்தமாக, மகிழ்ச்சியாக, துக்கமாக என வகைவகையாக வர்ணிக்கிறார். சிவனின் மார்பில் இருக்கும் பூணூலை தலையில் இருக்கும் கங்கை சிறு தாரையாக வெண்மையாய விழுவதாக உவமையுடன் சொல்கிறார். பாம்பு சிவனின் தலையில் இருக்கும் பிறை நிலவைக் கடிக்க முயல்வதாக, பிறை நிலா வளரும் என எதிர்பார்த்தல், பிறை நிலாவைக் கொம்பென வர்ணித்தலென்பதாக கற்பனை விரிகிறது.



சிலேடை நயத்துடன் உள்ள ஒரு பாடல் ‘அற்புத திருவந்தாதி’யில் உள்ளது. பாடல் 67. அதில் சிலம்பையும் மலையையும் குறிக்கும் சொல்லாக ‘சிலம்பு’ என்னும் சொல்லைப் பயன்படுத்தி இறைவனை வர்ணிக்கிறார். அப்பாடல்,





பாம்பும் மதியும் மடமானும் பாய்புலியும்
தாம் பயின்று தாழருவி தூங்குதலால் ஆம்பொன்
உருவடிவில் இங்கொளிசேர் கண்ணுதலான் கோலத்
திருவடியில் மேய் சிலம்பு.

இறைவனின் சடைக்கும் வானத்துக்குமான இன்னொரு பாடல் சிலேடை நயத்துடன் இருக்கிறது. (அ.தி.75.)

சிவபெருமான் கருமி. அதனால்தான் அவர் தம் மனைவிக்கென்று தனி வாகனம் கொடுக்காமல் தமது வாகனத்திலேயே அவரை அமர்த்திக்கொள்கிறார். அவ்வாறிருக்கையில் அவரின் பக்தையாகிய நான் அவரிடம் இரந்தால் எனக்கெங்கே அருள் புரியப் போகிறார் என நையாண்டி செய்தும் ஒரு பாடல் 'திரு இரட்டை மணி மாலை'யில் உள்ளது.

'அற்புத திருவந்தாதி' முழுவதும் ஒரு மன அமைதியையும் பக்தியும் கொண்டு ஆண்டவனைக் கண்டு எழும் வார்த்தைகளாகவே உள்ளன. தெளிந்த முழுமையான அமைதியுடன் கூடிய சொற்கள் நிறைந்த அற்புதமான இப்பாடல்கள் இலக்கிய இன்பம் தருவனவாயும் உள்ளன. ஆனால், 'திருவாலங்காட்டு மூத்த பதிகம்' படிப்போருக்கு இத்தகைய அனுபவங்களைத் தருவதில்லை. மன உளைச்சலும் வெறுமையும் அவரைத் துன்புறுத்தியதாகத் தெரிகிறது. தெளிவும் மனஅமைதியும் அவருக்குப் பின்னாட்களில்தான் கிடைத்தன என்பதும் தெரிகிறது.

காலத்தால் முந்தைய அம்மையாரும் பின்னர் தோன்றிய ஆண்டாளும் இறைவனைத் துதித்து இயற்றிய பாடல்கள் பக்தி காலத்திற்கு ஒரு சிறந்த உதாரணம் என்பதில் தவறேதும் இல்லை. ஆனால், ஒரு பெண் சராசரி நிலையிலிருந்து விலகி புத்திசாலியாகவும் அறிவாளியாகவும் இருந்து விட்டால், அவளுக்கு சமூகத்தில் கிடைக்கும் அவமானங்கள் எத்தகையவை என்பது அம்மையாரின் வாழ்க்கையிலிருந்து விளங்குகிறது. இது இன்றும் தொடர்கிறது என்பதே உண்மை.

இனி ஆண்டாள்...

ஆண்டாள் சொற்களில் இருக்கும் உல்லாசம் குதூகலம், களிப்பு படிப்போரையும் எளிதில் பற்றிக்கொள்ளும். ஆண்டாளின் 'திருப்பாவை'யில் வரும் சில பாடல்களை எடுத்துக்கொண்டு அவற்றிற்கு அழகியலாகவும் பக்திபூர்வமாகவும் இருக்கும் சில விளக்கங்களை கூற முயல்கிறேன்.

'மார்கழித் திங்கள்' எனத் தொடங்கும் முதல்பாடலில் துவங்கும் நீர் சார்ந்த வரிகளும் இடங்களும் திருப்பாவை முழுவதும் விரவிக் கிடக்கின்றன. பஞ்சபூதங்கள் எல்லாம் திருப்பாவையில் திரும்பத் திரும்ப சுழன்று வருகின்றன. 'நீர் நிறைந்த மேகம் போன்ற மேனியை உடையவன்' என்று

கண்ணன் குறிப்பிடப்படுகிறான். பின்வரும் 'ஏகாந்த கன்னி யசோதை இளஞ்சிங்கம்' என்ற வரிக்கும், பயந்து வாயைத் திறந்து அழும் பிள்ளையின் வயிற்றில் உலகமும் அதில் தானும் இருக்கக் கண்ட யசோதையின் தனயன் இளஞ்சிங்கம் தான். ஏனெனில், ஹிரண்யனுக்காக எடுத்த அவதாரம் பெரும் சிங்கம் எனில் இவன் இளஞ்சிங்கம்தானே என விளக்கம் தருகிறார்கள், முன்னோர். அந்தப் பெரும் சிங்கமும் இந்த இளம் சிங்கமும் வெவ்வேறு அல்ல. இரண்டும் ஒன்றுதான்.

எல்லோரையும் ஆற்றுக்கு அழைத்துச் செல்லுதல் என்பது முதல் பாடலிலேயே வந்து விடுகிறது. நீர் வளம் மிகுந்த ஊர் என்றால், மற்ற எல்லா வளமும் தானே வந்து சேரும் தான். எனவே, திருப்பாவையில் முழுக்க முழுக்க செழிப்பு. அதுவே குதூகலத்திற்கு ஒரு முக்கிய காரணம். என இருந்திருக்கலாம். இது பற்றி விளக்கமளித்த வேறொரு கவிஞர் கண்ணனை தாகவிடாய்த் தீர்க்கும் நீராகவும் ஆண்டாளை அதில் அமிழ்ந்து அனுபவிக்கும் பெண்ணாகவும் காண்கிறார். அவரவர் முதிர்ச்சிக்குத் தக்கவாறு பொருள் தரும் விதமாக அமைந்துள்ள இவை சத்தான பாடல்கள்.

முதற் பாடலிலேயே 'நீர்வள மேனியன்' முகம் சூரிய சந்திரன் இரண்டையும் உவமையாகக் காண்கிறோம். 'இளஞ்சிங்கம்' அவனைச் சென்றடையக் குறுக்கிருக்கும் பெரிய பெரிய தடைகளுள் முக்கியமானதாக ஆண்டாளும் அவள் தோழிகளும் தமது பெற்றோரைக் காண்கின்றனர். தடைகளை உடைக்கும் ஆயுதமாக வில் இருப்பதைப் போன்று நம் தடைகளை உடைத்து இச்சையை அடைய 'தனுர்' மாதம் சிறந்தது என்ற பொருள் கொள்ளும்படியாக சாதக எண்ணங்கள் பாடலில் விரவி உள்ளன.

பூலோகத்தில் திவ்ய தேசங்கள் நிறைந்து இருக்கிறபடியால் கோவில் இல்லாத சொர்க்க லோகத்தைக் காட்டிலும் உயர்ந்தது பூலோகம். அப்படிப்பட்ட பூலோகத்தில் நாம் மானிடப் பிறவி எடுத்திருக்கிறோம் என இரண்டாம் பாடலில் வையத்து வாழ்வீர் என்று தொடங்கும் வரிக்கு விளக்கம் அளித்துள்ளார் பக்தி சார்ந்தோர். இதே பக்தி பற்றி கூறும் ஆச்சாரியார்கள் 'சீதை பிறந்தவுடன் வளர்ந்து ஆறு வயதிற்குள்ளேயே ஸ்திரீகளுடன் அனுபவிக்கத்தகுந்த சரீரம், இச்சை முதலியவற்றை உடைய ஸ்ரீ கிருஷ்ணனுக்கு சமகாலத்திலேயே பிறந்து ஆறு வயதிலேயே யுவதிகளாகி கோகுலத்தில் உள்ள இதர புருஷர்களை நாடாமல் ஸ்ரீகிருஷ்ணனிடத்திலேயே அனுராகத்தை அனுபவத்தையும் அடைந்திருக்கிற நம்மை நாம் நன்கு அறிய வேண்டும்' என்று இன்னொரு விதமாகவும் சொல்கின்றனர். சாதாரண பார்வையில் இது சற்றே அதிர்ச்சி தரக்கூடியது.

'பாற்கடலுள் பையத்து நின்ற பரமனடி பாடி' என்ற வரிக்கு ஆச்சார்யர்களும் அழகியலாளர்களும் பல விளக்கங்கள் தருகிறார்கள்.

நோன்பிற்காக முன் முடிவுகளாக ஆண்டாளும் அவள் தோழியர்களும் நெய், பால் உண்ணாமல் மை தீட்டாமல் பூச்சூடாமல் என்று பல விரதங்களை மேற்கொள்ளுகின்றனர் எனச் சொல்லும் வரிகளும் அழகானவை.

ஆண்டாளின் பாடல்களில் இயற்கை வர்ணனை கொஞ்சி விளையாடுகிறது. திருப்பாவையில் விடியற்காலை வர்ணனை, ஒவ்வொரு பாடலிலும் வெவ்வேறாய் கிடைக்கிறது. ஒரு பாடலில் ஆயர் பெண்டிர் தயிர் கடையும் ஒலி அவர்களின் வளமான வாழ்க்கைக்கு எடுத்துக்காட்டாக சொல்லப்படுகிறது. வளமான பசுக்கள், அவை தரும் செல்வங்கள். அவற்றால் மகளிர் தமது கழுத்து நிறைய தங்க நகைகள் அணிந்து மகிழ்ந்து வாழும் குடும்பங்கள். எனவே, அதிகாலையில் தயிர் கடையும் போது அவர்களுடைய கழுத்தில் தொங்கும் தாலியும் மாலைகளும் ஒலி எழுப்புகின்றன என்பதை 'தமிராவும்' என்ற ஒரு புதிய சொல் மூலம் நமக்குத் தெரிவிக்கிறார், ஆண்டாள்.

திருப்பாவையில் சொல்லப்படுகின்ற நுண் உணர்வு கள், தம்மைச் சுற்றிலும் நிகழ்வதை அறியும் முழுத் திறன் கொண்டதான மனித அங்கங்கள். ஆண்டாளும் தன்னைச் சுற்றி நிகழ்வதை உள்வாங்கி வர்ணனையாக்கி விவரம் தெரிவிக்கிறார். பறவைகளின் இசை, தயிர் கடையும் ஓசை இருடிகளின் ஒருங்கிணைந்து உச்சரிக்கும் 'ஹரி' நாமம் மெல்ல மெல்ல எழும்பி எங்கும் காற்றில் பரவுவது இவைகளைச் சொல்லி காலை பொழுது புலர்வதை விவரிக்கிறார்.

ஆண்டாள், எல்லாப் பெண்களையும் ஒன்று போலவே எழுப்பிக்கொண்டு போகாமல், அப் பெண்களின் நிலை, அவள் தூங்கும் பாங்கு, அவள் குடும்பத்தாரின் சூழல்,என பலவிதங்களிலும் தொய்வில்லாமல், கண்ணன் நாமம் பற்றிப் பேசுவதால் உறக்கமே அண்டாமல் உற்சாகம் கொப்பளிக்க சிறுமி களின் கலகலப்பு ஓங்கி ஒலிக்கிறது.

திருப்பாவை ஆன்மீக பொருள் கொள்ளவும் அழகியல் பொருள் கொள்ளவும் இலக்கிய நயம் சொல்லவும் இடம் தருவதாக அமைந்துள்ளது. ஆண்டாளின் வாழ்க்கை உல்லாசத்திலும் களிப்பிலும் எதிர்காலத்தைப் பற்றிய சாதக எண்ணங்களிலும் இயற்கையின் அழகில் சுகிப்பதும் கண்ணன் மீதான அன்பிலுமே கழியப் பெறுகிறது.

சங்க இலக்கியம் முதல் இன்று வரை கலைகளின் மையம், கவிதைகளின் மையம் மானுடம் பாடுவதே என்பதை நாம் உணரும் வண்ணம் சங்ககாலப் பெண்பாற் புலவர்களின் பாடல்களையும் பக்தி கால பெண்பாற் புலவர்களின் பாடல்களையும் கண்டோம். இனி இக்காலத்தில் நவீன இலக்கியத்தில் எழுதிய, எழுதிக் கொண்டு உள்ள பெண் கவிஞர்களைப் பற்றி ஆராயலாம்.

(தொடரும்)

(4ஆம் பக்கத் தொடர்ச்சி..)

மாரடைப்பு ஏற்பட்டு அங்கேயே சிலர் மரணமடைந்த ஒன்றிரண்டு நிகழ்ச்சிகளும் நிகழ்ந்துள்ளன. எனவே கோயில்கள், திருமணம் போன்ற குடும்ப நிகழ்ச்சிகளின் போதும் மற்றவருக்கு இடையூறு செய்யாதவண்ணம் ஒலி அளவை குறைத்து வைக்கலாம்.

மோட்டார்வாகனச்சட்டத்தின்படி அதிகஒலிஎழுப்புவது அபராதத்திற்குரிய தண்டனையாக கருதப்படுகிறது. இதனை அரசு தீவிரமாக கடைபிடிக்க வேண்டும்.

அரசுவிதிகளின்படி, அமைதியான இடமாகக்கருதப்படும் பள்ளி கல்லூரிகளைச் சுற்றி 100 மீ தொலைவில் எந்த வணிக வளாகமும் தொழிற்சாலையும் இருத்தல் கூடாது, ஆனால், நகரின் பல இடங்களில் இது சரியாக கடைபிடிக்கப்படுவது இல்லை. இதனையும் அரசு முறைப்படுத்த வேண்டும்.

ஒலி மாசுபாடு (ஒழுங்குமுறை மற்றும் கட்டுப்பாடு) விதிகள் 2000, எந்த ஒலி-உமிழும் கருவியும் பரிந்துரைக்கப்பட்ட வரம்பைத் தாண்டி இரவில் செயல்பட முடியாது என்று கூறுகிறது. ஆனால், இன்று வரை பல கட்டுமானப் பணிகள் இரவில்தான் நடக்கின்றன. மேலும், நாள் முழுவதும் அமைதியான பகுதிகளிலும், இரவு 10 மணிக்குப் பிறகு குடியிருப்பு பகுதிகளிலும் சத்தம் போடுவது தடைசெய்யப்பட்டுள்ளது. மீறல்களுக்கு 1,000 முதல் 1 லட்சம் வரை அபராதம் விதிக்க சிறிசிஙி பரிந்துரைக்கிறது. ஆனால், அதிக சத்தம் வருவதைத் தொடர்ந்து கண்காணிப்பதற்கான அலைவரிசை மற்றும் உபகரணங்கள் நம் காவல்துறையிடமே இல்லை என்பது எவ்வளவு அவலமானது. இதனையும் அரசு கவனத்தில் கொள்ள வேண்டும்.

பொதுவாக நீர் மாசு, காற்று மாசு போன்று ஒரு சூழலியல் பிரச்சினையாகக் கருதும் அளவிற்கு நாம் ஒலி மாசுக்கு முக்கியத்துவம் கொடுப்பதில்லை. ஆனால், இனிமேல் இப்படி இருக்க முடியாது என்பதையே, அண்மைக் காலமாக ஒலி மாசு பெரிய பிரச்சினையாக உருவெடுத்து வருவது காட்டுகிறது.

எச்சரிக்கையாக இருப்போம்.

# இரண்டு ரோஜாக்கள்

**பாவண்ணன்**

'சர்வோதயம் மலர்கிறது' இதழுக்காக ஒவ்வொரு மாதமும் ஒவ்வொரு காந்திய ஆளுமையைப் பற்றிய விரிவான தகவல்களுடன் ஒரு கட்டுரையை நான் எழுதி வருகிறேன். அந்த வரிசையில் ஒரு குறிப்பிட்ட மாதத்தில் நான் லால் பகதூர் சாஸ்திரியைப் பற்றி எழுதிக் கொண்டிருந்தேன். அந்த நேரத்தில் விட்டல்ராவ் கைப்பேசியில் அழைத்தார். வழக்கமான நல விசாரிப்புகளுக்குப் பிறகு, "இப்போ என்ன எழுதிகிட்டிருக்கீங்க?" என்று கேட்டார். நான் லால் பகதூர் சாஸ்திரியைப் பற்றிய கட்டுரையை எழுதிக் கொண்டிருப்பதாகச் சொன்னேன்.

"முக்கியமான மனிதர் அவர். உங்க பட்டியல்ல அவசியம் இடம்பெற வேண்டியவர். எழுதுங்க, எழுதுங்க" என்றார்.

தொடர்ந்து, "அவரை நினைச்சாவே அறுபத்தி நாலுல பாகிஸ்தானுக்கும் இந்தியாவுக்கும் நடந்த யுத்தம்தான் ஞாபகத்துக்கு வருது பாவண்ணன். அற்புதமான மனிதர். நம்ம நாட்டுக்கு கிடைச்ச அருமையான பொக்கிஷம்னுதான் அவரைச் சொல்லணும்" என்று குறிப்பிட்டார்.

அடுத்து அவரைப் பற்றி தம் நினைவிலிருக்கும் பல செய்திகளைக் குறித்து சொல்லத் தொடங்கினார். முடிக்கும்போது, "வாழ்க்கை முழுக்க அவர் அரசியல்லயே கழிச்சவர். மாகாண அமைச்சர், மத்திய அமைச்சர்னு பல முறை பதவி வகித்தவர். நம்ம நாட்டுக்கு பிரதமராகவும் பதவி வகித்தவர். கடைசியா அவர் சாகும்போது, தவணை முறையில கடன்ல வாங்கிய ஒரு கார் மட்டும்தான் அவருடைய சொத்தா இருந்ததுன்னு படிச்சிருக்கேன். உதாரணமா எடுத்துக்காட்டி சொல்லறதுக்குக்கூட அவரை மாதிரியான ஒரு மனிதர் இன்னைக்கு நம்ம நாட்டுல இல்ல. அக்கம்பக்கத்து நாடுகள்ல கூட இருக்காங்களோ என்னமோ, தெரியலை. ஒரு அறுபது எழுபது வருஷங்களுக்குள்ள வாழ்க்கை முறையே மாறிப்போச்சி. எவ்வளவு பெரிய துரதிருஷ்டம் பாருங்க" என்று சொன்னபோது அவருடைய குரலில் வருத்தம் படிந்திருந்தது.

"இலட்சியவாதிகளைப் பத்தி மீண்டும் மீண்டும் படிப்பதன் வழியா நாட்டுல எங்கயாவது எப்படியாவது ஒரு இலட்சியவாதி உருவாக வழி இருக்குது சார்" என்று குறிப்பிட்டேன்.



"அந்த நம்பிக்கையிலதான் சார் நான் இந்தத் தொடரையே எழுதறேன்."

ஒரு நொடிக்குப் பிறகு, "நீங்க சொல்றது உண்மைதான். நாம நம்ம நம்பிக்கையை ஒருபோதும் விட்டுடக்கூடாது. எழுதுங்க, எழுதுங்க" என்றார் விட்டல்ராவ்.

அப்போது அவரிடம் சாஸ்திரியைப் பற்றி உரையாடி மேலும் சில விஷயங்களைத் தெரிந்துகொள்ளலாம் என்று தோன்றியது. அதனால், "நீங்க சாஸ்திரியைப் பார்த்திருக்கீங்களா சார்?" என்று நானாகவே ஓர் உரையாடலைத் தொடங்கினேன். விட்டல்ராவ் ஒரு கணம் கூட தாமதிக்கவில்லை. "பார்த்திருக்கேன் பாவண்ணன், பார்த்திருக்கேன்" என்று பதில் சொன்னார்.

அந்தப் பதில் எனக்கு உற்சாகத்தை அளித்தது. உடனே,"எந்த வருஷம் சார்? எப்ப பார்த்தீங்க? எப்படி பார்த்தீங்க?" என்று கேள்விகளை ஆர்வத்துடன் அடுக்கிவிட்டேன்.

"அறுபத்தி மூனுல நான் மெட்ராஸ்க்கு வந்தேன். டெலிபோன்ஸ்ல ஆப்பரேட்டரா சேர்ந்தேன். அறுபத்தி நாலுல நேரு திடீர்னு காலமாயிட்டார். அவருக்கு அடுத்து பிரதமரா சாஸ்திரி வந்தாரு. அதுக்கப்புறம் ஆறேழு மாசத்துக்குள்ளயே அவர் ஒருதரம் மெட்ராஸ்க்கு வருந்தாரு. அப்ப நான் அவரை ரொம்ப பக்கத்துலேர்ந்து பார்த்திருக்கேன்."

எனக்கு அந்தச் செய்தி மிகவும் வியப்பாக இருந்தது. "உண்மையாவா சார்? யாராவது அழைச்சிட்டு போனாங்களா, இல்ல நீங்களா பார்த்தீங்களா?" என்று கேட்டேன்.

"எனக்கு ஒரு நண்பர் இருந்தார். அவரும் டெலிபோன் ஆப்பரேட்டர்தான். என் கூட வேலை செஞ்சாரு. எனக்கு ரெண்டு வருஷம் சீனியர். அவருதான் என்னை அவர்கிட்ட அழைச்சிகிட்டு போனாரு" என்றார் விட்டல்ராவ்.

"யாரு சார் அவர்? ஒரு பிரதமரை தெரிஞ்சி வச்சிருக்கிற அளவுக்கு செல்வாக்கான மனிதரா?" என்று ஆச்சரியத்தோடு கேட்டேன்.

"சொல்றேன், சொல்றேன்" என்று என்னை அமைதிகொள்ளச் செய்தார் விட்டல்ராவ். "அவரு பேரு பிரசன்ன



வெங்கடேசன். கும்பகோணத்துக்காரர்."

"கும்பகோணத்துலேர்ந்து மெட்ராஸ்க்கு வந்திருந்தாரா?"

"ஆமாம். அந்தக் காலத்துல அப்படி ஒரு விதி இருந்தது. எல்லா மாவட்டத்துக்காரங்களும் மெட்ராஸ்க்கு வேலைக்கு வரலாம்னு. அப்படி வந்தவர் அவர். நானும் அவரும் ஒரே அறையில ரொம்ப காலம் இருந்தோம். அம்மா, அப்பா இல்லை. உறவுகளோடு கூட பெரிய நெருக்கம் எதுவும் இல்லை. அவர் உண்டு, அவருடைய வேலை உண்டு. அவ்வளவுதான். ஓய்வு நேரத்துல நிறைய படிப்பாரு. தொழிற்சங்கத்துல ரொம்ப ஆர்வம் உள்ளவர்."

"சரி சார், அவருக்கும் சாஸ்திரிக்கும் எப்படி தொடர்பு? புரியலையே."

"இருக்குது, இருக்குது. ஒரு சின்ன தொடர்பு இருக்குது. அது புரியணும்னு சொன்னா, அவரைப் பற்றிய முழுப் பின்னணியையும் நீங்க புரிஞ்சிக்கணும்."

"அவசரம் இல்லை சார், முழுசாவே சொல்லுங்க."

"அந்த காலத்துல எல்லா எக்சேஸ்ஞ்சுங்கள்லயும் என்.எஃப்.டி.இ. தொழிற்சங்கம்தான் ரொம்ப உறுதியான தொழிற்சங்கமா இருந்தது. அப்ப சீனிவாசராவ்னு ஒருத்தர் மெட்ராஸ் சர்க்கிள் செக்ரட்ரியா இருந்தாரு. நாங்க ரெண்டு பேருமே அந்த யூனியன்லதான் இருந்தோம். யூனியன் செயல்பாடுகள்ல பிரசன்னனுக்கு எப்பவுமே ஆர்வம் உண்டு. நிறைய படிப்பாரு. நிறைய கேள்வி கேப்பாரு. அடிப்படையில கம்யூனிஸ்ட் கட்சி மேல ஒரு பற்று கூட உண்டு. அவருடைய ஆர்வத்தை பார்த்துட்டு, அவருக்காகவே டில்லில யூனியன் ஆபீஸ்ல அசிஸ்டெண்ட் ஜெனரல் செக்ரட்டரின்னு ஒரு போஸ்ட்ட உருவாக்கினாங்க. அவரு மாசத்துக்கு ஒரு முறை போய், ஒரு வாரம், பத்து நாள் தங்கிட்டு வருவாரு. அவரு எப்ப போனாலும் தாதாகோஷ் பவன்ல ஒரு ரூம் குடுத்துடுவாங்க."

"சரி."

"யாராவது சொல்லி உண்டானதா அல்லது அவருக்குஇயற்கையாவே அந்ததாக்கம்இருந்ததான்னு எனக்குத் தெரியலை. திடீர்னு காந்தியம் மீது பிரசன்னனுக்கு ஆர்வம் உருவாச்சி. உடனே காந்தியப் புத்தகங்களைத் தேடித்தேடி படிக்க ஆரம்பிச்சாரு. எங்கயோ அவருக்கு காங்கிரஸ் இயக்க வரலாறு மூணு வால்யூம்ஸ் கெடைச்சிது. அதையெல்லாம் ராத்திரியும் பகலுமா படிச்சாரு. சத்திய சோதனை, தென்னாப்பிரிக்காவில்சத்தியாகிரகம்னுகாந்தியடிகள் எழுதிய புத்தகங்களையும் வினோபா எழுதிய புத்தகங்களையும் வாங்கி வச்சிகிட்டு படிச்சாரு. அதனுடைய விளைவா, அவருக்கு அடிப்படையில கம்யூனிஸம் மேல இருந்த ஈடுபாடு கொஞ்சம் கொஞ்சமா குறைஞ்சி காந்தியம், காங்கிரஸ்னு மாறிடுச்சி."

"அப்ப தொழிற்சங்கம்?"

"அதுல உறுதியாதான் இருந்தாரு. கடைசி வரைக்கும் என்.எஃப்.பி.டி. உறுப்பினராதான் இருந்தாரு. அதுல எந்த மாற்றமும் இல்லை."

"விசித்திரமாதான் இருக்குது."

"அந்தநேரத்துலசென்னையிலகோபண்ணான்னு ஒருத்தர் இருந்தாரு. இப்பவும் இருக்காரு. காங்கிரஸ்ல பெரிய ஆள். அவருக்கும் பிரசன்னனுக்கும் எப்படியோ ஒரு தொடர்பு உருவாயிடுச்சி. அவரோடு

பேசறது, பழகறது, விவாதிக்கறதுல ரொம்ப நேரம் செலவு செஞ்சாரு. அவரு டில்லிக்குப் போகிற சமயத்துல இவரும் டில்லிக்கு போவாரு. இவரு டில்லிக்கு போகற சமயத்துல அவரும் டில்லிக்குப் போவாரு. ரெண்டு பேருக்கும் நடுவுல அப்படி ஒரு நெருக்கம்."

"சரி."

"டில்லில அப்ப எங்கயோ பகுகுணாவைப் பார்த்துப் பேசி நண்பராயிட்டாரு. அப்ப அவரு நாடு தழுவிய அளவுல ஒரு பெரிய மது விலக்கு இயக்கம் ஒன்னை ஆரம்பிச்சிருந்தாரு. வட நாட்டுல பெண்கள் பெரிய அளவுல அந்த இயக்கத்துல பங்கெடுத்துகிட்டாங்க. அவரைச் சந்திச்சது, பேசினதையெல்லாம் மெட்ராஸ்க்கு வந்ததுமே எங்கிட்ட கதைகதையா சொல்வாரு பிரசன்னன். எல்லாத்தயும் பக்கம் பக்கமா டைரியில எழுதி வைப்பாரு.."

"டைரி எழுதற பழக்கம் உண்டா அவருக்கு?"

"ஆமாம். தினமும் எழுதுவாரு. அந்த டைரிங்க எல்லாம் இப்ப எங்க இருக்குதோ, யாருகிட்ட இருக்குதோ தெரியலை. இருந்தா, இன்னைக்கு அது ஒரு நாவல் மாதிரி இருக்கும். அந்த அளவுக்கு பலவிதமான அனுபவங்கள் அவருக்கு இருந்தது."

அதைக் கேட்ட போது வருத்தமெழுந்தது. "பெரிய இழப்புதான் சார். உயிரோடு இருக்கிற காலத்துல ரொம்ப பாடுபட்டு எழுதறாங்க. ஆனா, அவுங்க வாரிசுகளுக்கு அதும் மேல ஒரு மதிப்பும் இருக்கறதில்லை. பழைய பேப்பர் நோட்டு புஸ்தகம் வாங்கறவன்கிட்ட தூக்கிபோட்டுட்டு போயிடறாங்க. என்னமோ தெரியலை, தலைமுறைக்கு தலைமுறை இடைவெளி ரொம்ப அதிகமாயிட்டே போவுது" என்று ஒரு வேகத்தில் நான் சொன்னேன்.

சில கணங்களுக்குப் பிறகே என்னுடைய அவசரமான இடையீடு, உரையாடலை பிரசன்ன வெங்கடேசன் கதையிலிருந்து வெளியே தள்ளிவிட்டதை உணர்ந்தேன். உடனே சுதாரித்துக்கொண்டு, "அது இருக்கட்டும், நம்ம பிரசன்னன் கதையை சொல்லுங்க சார்" என்றேன்.

"டில்லியில இப்படியே ஒவ்வொரு ஆளுமையா பிரச்சன்னனுக்கு அறிமுகமானாங்க. எல்லாத்துக்கும் மூல காரணம் கோபண்ணா. நாம தட்டினா திறக்காத பல கதவுகள் அவரு கைய வச்சாவே தெறந்துக்கற காலமா, அன்னைய காலகட்டம் இருந்தது. அந்த வரிசையில ஒருமுறை அவர் பிரதமரா இருந்த லால் பகதூர் சாஸ்திரியை போய் சந்திச்சாரு."

"சாஸ்திரியையா?"

"ஆமாம். பிரதமர் சாஸ்திரியைத்தான். தமிழ்நாட்டைப் பத்தி அவர் என்னமோ சில கேள்விகள் கேட்டிருக்காரு. பிரசன்னனும் தனக்குத் தெரிஞ்சத சின்சியரா பதில் சொல்லியிருக்காரு. படிப்பு, வேலை, ஊரு விவரங்களையெல்லாம் கேட்டிருக்காரு. பேசிட்டு கௌம்பற சமயத்துல சாஸ்திரி மேசை மேல இருந்த பூஜாடியிலிருந்து ரெண்டு ரோஜா பூக்களை எடுத்து பிரசன்னனுக்கு கொடுத்திருக்காரு. அவரு அந்த பூக்களை தேவலோகத்துப் பூக்கள் மாதிரி நெனச்சி ரொம்ப சந்தோஷத்தோடு வாங்கிட்டு வெளியே வந்திட்டாரு."

"உங்ககிட்ட காட்டினாரா?"

"அந்த ரோஜா பூக்களை அப்படியே ஒரு புத்தகத்துல ரெண்டு பக்கங்களுக்கு நடுவுல வச்சி பாதுகாப்பா எடுத்துவந்து என்கிட்ட காட்டினாரு. என்கிட்ட மட்டுமில்லை, ரூமுக்கு வந்துபோகக்கூடிய எல்லார்கிட்டயும் காட்டினாரு. சாஸ்திரிய சந்திச்ச நாள்ல எழுதிய டைரிப் பக்கத்துல அந்தப் பூவை வச்சிகிட்டாரு. அது வாடி உலர்ந்து ஒரு தாள் மாதிரி ஆயிட்டுது. அப்பவும் அதை பத்திரமா வச்சிருந்தாரு. பத்து பதினைஞ்சி வருஷங்களுக்கும் மேல அந்த டைரிக்குள்ளயே அந்தப் பூவை வச்சிருந்தாரு. அவரைப் பொறுத்த வரைக்கும் அது வெறும் பூ இல்லை. சாஸ்திரியாகவே அத நெனச்சிகிட்டாரு. அதுவும் சாஸ்திரியுடைய சாவுக்குப் பிறகு அந்தப் பூவை அவர் புதையல் மாதிரி பாதுகாப்பா வச்சிருந்தாரு."

"அப்புறம் என்ன ஆனார்?"

"அவருடைய அறிவுக்கும் ஞானத்துக்கும் அவரு என்னென்னமோ ஆகியிருக்கலாம். ஆனா விதி அவரை எதுவாகவும் ஆக விடலை."

விட்டல்ராவின் பதில் எனக்கு அதிர்ச்சியைக் கொடுத்தது. "என்ன சார் சொல்றீங்க?" என்று திகைப்புடன் கேட்டேன்.

"என்னன்னு சொல்றது பாவண்ணன்? அதுதான் காலத்துடைய கொடுமை."

"என்ன சார் சொல்றீங்க, புரியலையே."

"தொழிற்சங்கமா இருந்தாலும் சரி, நிர்வாகமா இருந்தாலும் சரி, ஒரு மனுஷன் நேர்மையானவனா இருக்கணும்னு நெனைக்கிறவர் அவரு. தனிப்பட்ட லாபத்துக்காக ஒரு வேலையைச் செய்யறவனை அவருக்கு புடிக்கவே புடிக்காது. அதனால, அவருக்கு தொழிற்சங்க சைட்லயும் கெட்ட பேரு. நிர்வாகத்து சைட்லயும் கெட்ட பேரு. பெரிய அளவுல அவரால முன்னேற முடியலை."

"த்ச் த்ச்."

"இந்திரா காந்தி நெருக்கடி நிலைமை சட்டத்தை நாடு முழுக்க கொண்டு வந்த சமயத்துல, அது நாட்டு நலனுக்கான சட்டம்தான்னு பேசினாரு பிரசன்னன். எக்சேஞ்ச்ல இருக்கிறவங்க எல்லாருமே அதுக்கு எதிர்ப்பான மனநிலையில இருந்த சமயத்துல, பிரசன்னன் மட்டும் அது சரியான சட்டம்தான்னு உறுதியா சொன்னாரு. தேசிய அளவுல வலது

கம்யூனிஸ்ட் கட்சி என்ன நிலைபாடு எடுத்தாங்களோ, அதே நிலைபாட்டை நம்ம தோழர் பிரசன்னனும் எடுத்தாரு.”

“உங்க ரெண்டு பேருக்கு நடுவுல நல்ல முறையில பேச்சு வார்த்தை இருந்ததில்லையா?”

“அதிலெல்லாம் ஒரு குழப்பமும் இல்லை. நாங்க எப்பவும் போல சிரிச்சி பேசிகிட்டுதான் இருந்தோம்.”

“சரி.”

“பத்து வருஷம் சர்வீஸ் இருந்தா டிப்பார்ட்மென்ட் நடத்தக்கூடிய போட்டித் தேர்வுகளை எழுதலாம்னு ஒரு விதி இருந்தது. ஒருத்தரு நாப்பது வயசு வரைக்கும் அப்படி தேர்வுகளை எழுதி மேல மேல போவலாம். அப்படி ஒரு வசதி வச்சிருந்தாங்க. பிரசன்ன வெங்கடேசன் நல்ல புத்திசாலி. ‘எவ்ளோ காலம்யா ஆப்பரேட்டராவே இருக்கறது, ஆர்.எஸ்.ஏ. எக்சாம், ஜே.இ. எக்சாம்னு ஏதாவது ஒரு எக்சாம் எழுதி பாஸ் பண்ணிட்டு போயிடலாம்பா’ன்னு சொல்லி எனக்கும் சேர்த்து அப்ளிகேஷன் வாங்கி வந்தாரு. ரெண்டு பேரும் அப்ளை செஞ்சோம். ரெண்டு பேரும் புஸ்தகம் நோட்ஸ்லாம் வாங்கி வச்சிகிட்டு சின்சியரா படிச்சோம். ரெண்டு தரம் எழுதனோம்.”

“அப்புறம்?”

“சாதகமான முடிவு கிடைக்கும்னு ஒவ்வொரு தரமும் ரொம்ப நம்பிக்கையாத்தான் காத்திருந்தோம். ஆனா ரெண்டு மூனு மதிப்பெண்கள்ல முடிவு மாறி போச்சு. செலக்டாகலை.”

“அடடா, ரெண்டு பேருக்குமா?”

“எனக்கு ரெண்டு முறையும் தோல்விதான். ஆனா பிரசன்னன் ரெண்டாவது முறை ஜே.இ. எக்சாம் எழுதிய சமயத்துல பாஸாயிட்டாரு..”

”அப்புறம்?”

“ஆனா, மேலதிகாரிகளுக்கு அவருக்கு ஜே.இ. போஸ்டிங் கொடுக்கக்கூடாதுன்னு ஒரு எண்ணம். அவரைப் பத்திய கான்பிடன்ஷியல் ரிப்போர்ட்ல கன்னாபின்னான்னு எழுதி கெடுத்து வச்சிட்டாங்க. ஒரு எக்சாம்ல நீங்க பாஸ் பண்ணிட்டீங்கன்னா, உங்கள உடனடியா ட்ரெய்னிங்க்கு அனுப்பணும். அதுதான் விதி. ஆனா அன்னைக்கு ஆபிசரா இருந்த ஆள், பிரசன்னனுக்கு ட்ரெய்னிங் ஆர்டர் குடுக்காமலே காலம் தாழ்த்தினாரு.”

“ஏன்?”

“வெறுப்புதான். வெறுப்புக்கு என்ன காரணம் சொல்லமுடியும்?”

“அப்புறம்?”

‘பிரசன்ன வெங்கடேசன் சட்டப்படி அதை எதிர்கொள்ளணும்னு ரொம்ப விவேகத்தோடு ட்ரைப்யூனலுக்கு போனாரு. விசாரணைக்குப் பிறகு அவருக்கு உடனடியா ட்ரெய்னிங் ஆர்டர் கொடுக்கணும்னு தீர்ப்பு வந்தது. அதுக்குள்ள வேற ஆபீசர் வந்துட்டாரு. எனக்கும் இதுக்கும் சம்பந்தமில்லைன்னு அவர் ஃபைல தூக்கி ஓரம் கட்டிட்டாரு. யூனியன் மூலமா நெருக்கடி கொடுத்த சமயத்துல இதோ செய்றேன், அதோ செய்றேன்னு பேசிப் பேசியே காலம் தாழ்த்தினாரு. அதுக்குள்ள நம்ம பிரசன்னனுக்கு வெறுத்துப் போயிடுச்சி. சீ போங்கடான்னு அந்த விவகாரத்தையே தூக்கி கெடாசிட்டு ஆப்பரேட்டராவே இருந்துக்கறேன் போங்கடான்னு போயிட்டாரு.”

ஒரு கணம் என்ன பேசுவதென்றே தெரியவில்லை. அமைதியாக இருந்தேன். பிறகு என்னை நானே திரட்டிக்கொண்டு,“அப்படின்னா, கடைசி வரைக்கும் ஆப்பரேட்டராவே இருந்து ரிட்டயராயிட்டாரா?” என்று கேட்டேன்.

“ரிட்டயர்மென்ட்டா?” என்று கேட்டுவிட்டு ஒரு கணம் அமைதியாக இருந்தார் விட்டல்ராவ். பிறகு ஒரு பெருமூச்சுடன், “இந்த உலகத்துலேர்ந்தே ரிட்டயர்மென்ட் வாங்கிட்டு போயிட்டாரு” என்றார்.

“என்ன சார் சொல்றீங்க?”

“உண்மைதான் பாவண்ணன், சர்வீஸ்ல இருக்கும்போதே செத்து போயிட்டாரு.”

“எப்படி?” என்று அதிர்ச்சியுடன் கேட்டேன்.

“என்னன்னு சொல்றது? அவரு வாழ்க்கையில எதுவும் நெனச்சது மாதிரி நடக்கலை. ஆள் கொஞ்சம் குள்ளமா இருப்பாரு. ஆனா நல்ல அழகா களையா இருப்பாரு. யாரையாவது கல்யாணம் பண்ணிக்குங்க, நாங்க எல்லாரும் பக்கத்துல இருந்து நடத்தி வைக்கறோம்னு அவருக்கு நம்பிக்கையூட்டினோம். எக்சேஞ்ச்லயே ஒன்னு ரெண்டு பொண்ணுங்க அவரை கல்யாணம் செஞ்சிக்க தயாரா இருந்தாங்க. ஆனா, அவருதான் புடியே கொடுக்கலை. வேணாம் தோழர், வேணாம் தோழர்னு தள்ளி தள்ளி போட்டுட்டே வந்தாரு. ஒரு கட்டத்துல அவரை வற்புறுத்தறதயே நாங்க விட்டுட்டோம்.”

“அப்புறம்?”

“அவரா திடீர்னு ஒரு பொண்ண கல்யாணம் செஞ்சிகிட்டாரு. சரி, எப்படியாவது வாழ்க்கையில ஒரு கட்டுக்கோப்புக்கு வந்தா போதும்னு நாங்க யாருமே ஒன்னுமே சொல்லலை. ஆனா, அந்த பொண்ணுக்கும் அவருக்கும் நடுவுல என்னமோ பிரச்சினை. எதுவோ ஒன்னு சரியில்லை. அவரை அம்போன்னு விட்டுட்டு ரெண்டு வயசு புள்ளையோட டில்லிக்கு போயிட்டுது.”

“டில்லிக்கா?”

“பல தரம் அவர் டில்லிக்கு போய் போய் அந்த அம்மாவை வரச் சொல்லி கெஞ்சுவாரு. ஆனா அந்த அம்மா அவரை வீட்டுப் பக்கமே சேர்க்காது. பிள்ளை மூஞ்சிய கூட கண்ணுல காட்ட மாட்டங்களாம்.

போ போன்னு ஒரு நாயை விரட்டுறமாதிரி விரட்டி விட்டுடுவாங்களாம்."

"பிறகு?"

"ஒரு கட்டத்துல போகறதயே நிறுத்திட்டாரு. ஆனா, அதுக்குள்ள குடிப் பழக்கத்துக்கு அடிமை யாயிட்டாரு. ஒரு காலத்துல மதுவிலக்கு போராட்டத்தை பாராட்டிச் சொன்ன ஆள், கடைசி காலத்துல மதுவுக்கு அடிமையாகி அனாதையா செத்து போயிட்டாரு."

நான் அந்த முடிவை எதிர்பார்க்கவில்லை."என்ன சார் இது? கடைசியில சோகத்துல முடிஞ்சிட்டுது நம்ம பிரசன்னன் கதை" என்றேன்.

"பொதுவா பத்திரிகையில விதி விளையாடி யதுன்னு எழுதுவாங்க, படிச்சிருக்கீங்களா? அந்த மாதிரி நம்ம பிரசன்னன் வாழ்க்கையில விதி ரொம்ப மூர்க்கமா விளையாடி அவரை வீழ்த்திடுச்சி. அப்படித்தான் சொல்லத் தோணுது."

"கேக்கறதுக்கே ரொம்ப சங்கடமா இருக்குது சார்."

"எனக்கு அந்தக் காலகட்டத்துல அவர் முடிவு தாங்கிக்கவே முடியாத பாரமா இருந்தது பாவண்ணன். பல வருஷங்களா நானும் அவரும் ஒரே அறையில இருந்தவங்க. பேசிப் பழகினவங்க. கடைசி காலத்துல யாருமே இல்லாத அனாதையா செத்து போயிட்டாரு அவரு. அதைப் பார்க்க பார்க்க என் நெஞ்சே வெடிக்கிற மாதிரி இருந்தது. ஆஸ்பத்திரியிலேர்ந்து உடலை வாங்கிட்டு எங்க எடுத்துட்டு போறதுன்னு தெரியாம தவியா தவிச்சிட்டோம். சொந்தமா வீடு இல்லை. வாசல் இல்லை. உறவு இல்லை. அந்த நேரத்துல நாங்க அடைஞ்ச துயரத்துக்கு அளவே இல்லை."

"கடைசியா என்னதான் செஞ்சீங்க?"

"ஜகஜீவன்ராம் நகர்ல டெலிபோன்ஸ்க்கு சொந்தமான க்வார்ட்டர்ஸ் இருந்தது. அங்க ஒரு தோழர் இருந்தாரு. நம்ம தோழரை இங்க கொண்டு வாங்க தோழர். நாம இங்க வச்சி இறுதி மரியாதை செலுத்திட்டு சுடுகாட்டுக்கு போகலாம்னு சொல்லி, அவருதான் தைரியம் கொடுத்தாரு. அவர் அன்னிக்கு சொன்ன அந்த ஒரு வார்த்தைதான் பிரசன்னனுக்கு ஒரு கௌரவமான இறுதிச் சடங்கை செய்யறதுக்கு ஒரு வாய்ப்பை அமைச்சிக் கொடுத்தது. அதை ஒருநாளும் என்னால மறக்க முடியாது."

ரொம்பவும் உணர்ச்சிவசப்பட்ட குரலில் சொன்னார் விட்டல்ராவ். "அந்த மாதிரியான சாவு ஒரு எதிரிக்கும் கூட வரக்கூடாது பாவண்ணன். அன்னைக்கு அனுபவிச்ச சங்கடங்களையும் வேதனை களையும்தான் பிற்காலத்துல நான் காம்ரேடுகள்ங்கற தலைப்பில ஒரு நாவலா எழுதினேன்.

அவர் அந்தப் பெயரைச் சொன்னதும் அந்த நாவல் என் நெஞ்சில் விரிந்துவிட்டது. பிரசன்ன வெங்கடேசனுக்கும் நாவலுக்கும் இவ்வளவு நேரமும் தோன்றாத ஒற்றுமையை அக்கணத்தில் புரிந்துகொண்டேன். "ஞாபகம் இருக்குது சார்" என்று பொறுமையாகச் சொன்னேன்.

"பிரசன்னவெங்கடேசன் அடிப்படையிலரொம்ப நல்லவர். நல்ல புத்திசாலி. அடுத்தடுத்து அவருக்கு வாழ்க்கையில ஏற்பட்ட தோல்விகள் அவரை இஷ்டம்போல உதைச்சி பந்தாடிடுச்சி. கொஞ்சம் தைரியமா இருந்திருந்தா மீண்டிருக்கலாம். ஆனா திடீர்னு அவரு கோழையாகி மதுவுக்கு அடிமை யாகிட்டாரு. மது மீட்சி தரும்னு நெனச்சிட்டாரு. ஆனா அது கடைசியா அழிவைத்தான் கொடுத்தது. அதை உணர்வதற்குள்ள அவரே இல்லாம போயிட்டாரு."

பெருமூச்சுடன் விட்டல்ராவ் சொல்லிக் கொண்டே இருந்தார். ஒரு வடிகால்போல இருக்கட்டும் என நான் குறுக்கிடாமல் அமைதியாகக் கேட்டுகொண்டிருந்தேன்.

"சாஸ்திரி கொடுத்த ரோஜா, சாஸ்திரி கொடுத்த ரோஜான்னு அந்த வாடிய தோற்றத்தோடு ரெண்டு சிவப்பு ரோஜாக்களை டைரிக்குள்ள வச்சி கொண்டுவந்து பரவசத்தோடு காட்டினதெல்லாம் இன்னும் என் கண்ணுக்குள்ளயே இருக்குது. நோட்டுக்குள்ள அது மடிஞ்சியிருக்கிறத பார்க்கும்போது என்னமோ ரத்தக் கறை மாதிரி இருக்கும்."

விட்டல்ராவ் மறுமுனையில் ஒருமுறை மூச்சை இழுத்துக்கொண்டு தொண்டையைச் செருமி சரிப்படுத்துக்கொள்வதை ஓசை வழியாகவே உணர்ந்து அமைதியாக இருந்தேன்.

"சாஸ்திரி சென்னைக்கு வந்த சமயத்துல பார்த்திருக்கேன்னு சொன்னேனில்லையா? அப்ப பிரசன்னனை கோபண்ணா அழைச்சிகிட்டு போனாரு. அவருக்குத் துணையா நானும் போனேன். ரொம்ப பக்கத்துல நின்னு சாஸ்திரியை பார்க்கிறதுக்கு எனக்கு ஒரு வாய்ப்பு கிடைச்சது. பிரசன்னனைப் பார்த்ததுமே 'ஹௌ ஆர் யூ மை டியர் யங் மேன்'னு சிரிச்சிகிட்டே கேட்டாரு சாஸ்திரி. அவரு வணக்கம் சொல்லிகிட்டே ஏதோ பதில் சொன்னாரு. அப்பதான் அவுங்க ரெண்டு பேருக்கும் இருந்த ஒற்றுமையை கண்டுபுடிச்சேன். ரெண்டு பேருமே ஒரே உயரம், ஒரே மாதிரியான உடல்வாகு. எல்லாமே எனக்கு ஞாபகம் இருக்குது. த்ச், பாவம், பிரசன்னன்தான் பாதி சினிமாவுல எழுந்து போறமாதிரி அரைகொறயா வாழ்ந்துட்டு போயிட்டாரு."

உரையாடல் தானாகவே அந்தப் புள்ளியில் நின்றுவிட்டது.

டைரிப் பக்கங்களுக்கு நடுவில் வாடி ஒரு காகிதம்போல உருமாறியிருக்கும் ரோஜாப் பூக்களின் தோற்றம் உடனடியாக என் மனத்தில் எழுந்தது.●

பாவண்ணன் <writerpaavannan2015@gmail.com>

# அன்றும். இன்றும். என்றும்...
# உங்களுடன் ஸ்ரீராம்...





1975 இல் திரு. தியாகராஜன் தனது ஒரே மகளின் கல்யாண செலவு திட்டத்திற்கு மேல் அதிகரித்தது. பாக்கித் தொகைக்கு எங்கே செல்வது? மனைவியின் நகையை அடமானமோ, நிதியுதவியோ, வீட்டின் மீது கடனோ இதற்கெல்லாம் வழியில்லை. அவர் எப்படி சமாளித்தார்? ஏற்கனவே சேர்ந்திருந்த ஸ்ரீராம் சீட்டை ஏலத்தில் எடுத்து வெளி ஆதரவையோ, உதவியையோ நாட வேண்டிய அவசியமின்றித் தனது தேவைக்கான நிதியைப் பெற்றார்.

இன்று திருமதி. லதா முசிறியில் காய்கறி வியாபாரம் செய்து வருகிறார். ஸ்ரீராம் நிறுவனத்தில் ரூ.1 இலட்சம் நிதியுதவி பெற்று வியாபாரத்தில் முதலீடு செய்து நல்ல வருமானம் பெற்று ஸ்ரீராம் குடும்பத்தில் அங்கத்தினராக இருக்கிறார்.

1974 ஆம் ஆண்டு துவங்கப்பட்டு ஸ்ரீராம் சீட்டு நிறுவனம் ரூ.250 முதல் சிறிய தொகையில் சீட்டுக்களை தொடங்கி ஏழை எளிய மக்கள் தங்களின் வீடு, கல்வி, திருமணம் மற்றும் மருத்துவச் செலவு என பலவித தேவைகளைப் பூர்த்தி செய்ய கடந்த 40 வருடங்களாக, 4 தலைமுறைகளாக பெரும்பங்களித்துள்ளது. இன்று 50,000 ரூபாய் முதல் 50 இலட்சம் வரையிலான சீட்டுத் திட்டங்கள் மூலம் 700 கிளைகள், 12000 பணியாளர்கள், 80,000 முகவர்கள், ரூ.60000 கோடிக்கு மேல் பணம் வழங்கப்பட்டு, 40 இலட்சம் வளமான வாடிக்கையாளர்கள் என வளர்ச்சியடைந்துள்ளது.

இன்று இந்தியாவில் 80% லாரிகள் தனி நபர் வசமே உள்ளது. ஸ்ரீராம் டிரான்ஸ்போர்ட் பைனான்ஸ் கம்பெனி லிமிடெட் இந்தியாவில் இயங்கும் லாரிகளில் 25% அளவிற்கு நிதியுதவி அளித்து ஓட்டுநர்களாக இருந்தவர்களை லாரி உரிமையாளராக உருவாக்கியுள்ளது. இதன் மூலம் 15 இலட்சம் பேர் பயனடைந்துள்ளனர். ஸ்ரீராம் டிரான்ஸ்போர்ட் பைனான்ஸ் கம்பெனி லிமிடெட் கடந்த 40 வருடங்களாக லாரி உரிமையாளர்களுக்கு கடன் வழங்கி வருகிறது. இன்று லாரிக் கடன் வணிகம் (AUM) ரூ.55000 கோடி உள்ளது.

கடந்த 30 ஆண்டுகளாக ஸ்ரீராம் சிட்டி யூனியன் பைனான்ஸ் லிமிடெட் – குறு, சிறு மற்றும் நடுத்தர என தொழில் முனை வோருக்கு சராசரியாக நபர் ஒருவருக்கு ரூ.2 இலட்சம் வரை நிதி வழங்கிள்ளது. இந்த சேவை 995 கிளைகள், 15,506 பணியாளர்கள் மூலமாக 23 இலட்சம் வாடிக்கையாளர்களுக்கு நிதியுதவி வழங்கப்பட்டு 14,937 கோடி ரூபாய் வணிகம் (AUM) உள்ளது.

ஸ்ரீராம் ஹவுசிங் பைனான்ஸ் லிமிடெட் நிறுவனம் தொடங்கப்பட்டு வீடு வாங்க கடன் சராசரியாக நபர் ஒருவருக்கு ரூ.10.23 இலட்சம் என வழங்கப்பட்டுள்ளது. இந்த சேவை 47 கிளைகள், 259 பணியாளர்கள் மூலமாக செயல்பட்டு வருகிறது. இதுவரை 3000 வாடிக்கையாளர்களுக்கு ரூ.322.64 கோடி நிதியுதவி வழங்கப்பட்டுள்ளது.

தென் ஆப்பிரிக்காவின் மிகப் பெரிய காப்பீட்டு நிறுவனமான **SANLAM** னுடன் இணைந்து இந்தியாவில் ஸ்ரீராம் லைஃப் இன்சூரன்ஸ் லிமிடெட் நிறுவனம் மூலம் இது வரை 10,34,630 காப்பீடுகள் பெறப்பட்டு இழப்பீட்டு தொகை ரூ.87.26 கோடிகளும் மற்றும் **SANLAM**-ன் கிளைப் பிரிவாகிய **SANTAM** னுடன் இணைந்து ஸ்ரீராம் ஜெனரல் இன்சூரன்ஸ் லிமிடெட் நிறுவனம் மூலம் இது வரை 14,07,677 காப்பீடுகள் பெறப்பட்டு இது வரை இழப்பீட்டு தொகை ரூ.452.62 கோடிகள் வழங்கப்பட்டுள்ளது.

தொழில் முனைவோர்களை அதிகம் கொண்ட நாடு இந்தியா. அத்தகைய தொழில் முனைவோரை ஊக்குவித்து, நிதியளித்து, வருவாய் பெருகவும், வாழ்க்கைத் தரம் மேம்படவும் உதவுகிறோம். கடந்த 40 வருடங்களாக விஜயதசமி மற்றும் சித்திரை என இருமுறை நடைபெறும் சீட்டுத் திருவிழாவில் பங்கு கொண்டு உங்கள் தேவைகளுக்கு ஏற்ப திட்டங்களை தேர்ந்தெடுத்து பயனடைந்துள்ளீர்கள். இந்த இணக்கமான உறவு அன்றும், இன்றும், என்றும் தொடர்ந்து கொண்டே இருக்கும். மேலும் விவரங்களுக்கு அருகிலுள்ள ஸ்ரீராம் சிட்ஸ் கிளைக்கு வாருங்கள்.

**ஸ்ரீராம் சிட்ஸ்**

மக்களின் வளமான வாழ்வுக்கு வழிகாட்டி

கிரீம்ஸ் துகார், 149 கிரீம்ஸ் சாலை, சென்னை 6 • போன்: 4223 6000 www.shriramchits.com

WORDCRAFT

## பர்மா பஜார்

# மாறிவரும் சந்தைப் பொருளாதாரத்தின் முகம்

**சந்தியா நடராஜன்**

சென்னைக்கு முதன்முதலாக வந்தபோது சுற்றிப் பார்த்த இடங்களில் ஒன்று பர்மா பஜார். பட்டிக்காட்டான் மிட்டாய்க் கடையைப் பார்த்தது போலத்தான் இருந்தது என் நிலை. 'டூப்ளிகேட் அயிட்டங்களை உன் தலையில் கட்டிவிடுவார்கள். எதையும் பார்த்து வாங்கு. பேரம் பேசு' என்று அறிவுரை வழங்கி இருந்தான் என் சென்னை நண்பன்.

பாரி முனையிலிருந்து பர்மா பஜார் கடைகளைப் பார்த்துக்கொண்டே ஒரு பர்லாங் தூரம் நடந்தேன். எதுவும் வாங்கவில்லை. பர்மா பஜார் வியாபாரிகள் ஏதோ அயல் கிரகத்து மனிதர்கள் போல் தோன்றினார்கள். அச்சமும் வியப்பும் என் உள்ளத்தில் மாறி மாறிக் குடிமை கொண்டன. ஆனால், கண்ணில் பட்ட சார்லி செண்ட்டும் யார்ட்லி பவுடரும் காபர்டைன் பேண்ட் பிட்டுகளும் வெளிநாட்டு சாக்லெட்டுகளும் 'வா வா' என்று அழைத்தபடியே இருந்தன.

1970களின் பிற்பகுதியில் இந்த பர்மா பஜார் உலா நிகழ்ந்தது. அதற்குப் பிறகு ஐந்தாறு ஆண்டுகளில், அதாவது 1985ஆம் ஆண்டு மார்ச் 4ஆம் தேதி இந்த பர்மா பஜாருக்கு எதிர் வரிசையில் சென்னைத் துறைமுகத்தின் மெயின் கேட்டுக்கு எதிரே உள்ள சென்னை சுங்க இல்லத்தில் சுங்க அதிகாரியாகச் சேர்ந்தேன். அது முதற்கொண்டு அடுத்த முப்பது ஆண்டுகளுக்கு பர்மா பஜாரின் நிழல் உலக மனிதர்களைக் குறித்த தகவல் சேகரிப்பு எனது வாழ்வின் ஒரு பகுதியாக மாறிவிட்டது.

1985களில் சுங்க இல்லத்தில் ஒரு நீல நிற வேன் இருந்தது. நகரில் ஏதாவது ஒரு சோதனைக்கோ அல்லது நீதிமன்றத்துக்கோ அதிகாரிகளை அழைத்துச் செல்ல அந்த நீல நிற வேன் பயன்படுத்தப்படும். அந்த வேன் பர்மா பஜாரைக் கடக்கும்போதெல்லாம் கடைக்காரர்கள் ஷட்டர்களை வேகவேகமாக மூடுவார்கள். அது ஒரு வழக்கமாகவே இருந்தது. இந்த வழக்கம் குறித்து விசாரித்தபோதுதான் பர்மா பஜாரின் பூர்வ சரித்திரம் தெரிய ஆரம்பித்தது.



பர்மா பஜார், பர்மாவிலிருந்து அகதிகளாகத் தமிழ்நாட்டிற்குத் திரும்பிய தமிழர்களால் உருவானது. வணிகத்திற்காகவும் வாழ்வாதாரத்திற்காகவும் தமிழர்கள் புலம்பெயர்ந்த நாடுகளில் ஒன்று மியான்மர் என்றழைக்கப்படும் பர்மா. அங்கே இருந்து தேக்கு மரங்கள், பருப்பு வகைகள் உள்ளிட்ட பல பொருள்களை இறக்குமதி செய்து வணிகத்தில் ஈடுபட்டிருந்திருக்கிறார்கள் சென்னை செட்டியார்கள். சென்னைத் துறைமுகத்திற்கு எதிரேயுள்ள 'ரேவு' பகுதி வாணிப கிடங்குகள் நிறந்ததாக இருந்திருக்கின்றது. (பொருட்கள் புழங்கிய பகுதி இன்று 'பொருள்' வைத்துக்கொண்டு திரிபவர்களுக்கும் புகலிடம் தந்திருக்கிறது. பயங்கர ஆயுதங்களுடன் ரவுடித்தனம் செய்கிறவனை, 'அவன் ரேவுகாரன்' என்று சொல்லுமளவுக்கு 'ரேவு' பகுதியின் வண்ணம் மாறியிருக்கிறது.)

வளமும் வசதியும் ஒருசேரக் கைகூடி வாழ்ந்த பர்மா தமிழர்களுக்கு இரண்டாம் உலகப் போர் பேரிடியாக அமைந்தது. 1941ஆம் வருட கிறிஸ்துமஸ் பரிசாக ஜப்பானிய விமானங்கள் ரங்கூன் மீது குண்டுமழை பொழிந்தன. பர்மாவிலிருந்து தமிழர்கள் உயிர் பிழைத்து ஓடி வந்தார்கள். இது பர்மாவின் முதல் அகதி அலை.

1962ஆம் ஆண்டில் பர்மாவில் இராணுவப் புரட்சியால் ஆட்சியைக் கைப்பற்றிய ஜெனெரல் நீ வின் (Ne Win) ஒட்டுமொத்தத் தமிழர்களையும் நாட்டை விட்டு விரட்டியடிக்கும் வேலையில் இறங்கினார். தமிழர்கள் வெறுத்து ஒதுக்கப்பட்டுக் கொடுமைகளுக்கு ஆளானார்கள். இந்த ஒடுக்குமுறை 1964ஆம் ஆண்டு தீவிரமடைந்தது. பர்மாவிலிருந்து

தமிழர்கள் வெளியேறத் தொடங்கினர். இந்திய அரசும் அவர்களைப் பாதுகாத்துப் பத்திரமாகக் கொண்டு வரக் கப்பல்களையும் விமானங்களையும் ஏற்பாடு செய்தது.

வீடு வாசல் இழந்து பர்மாவிலிருந்து வெளியேறிய தமிழர்களின் இந்த இரண்டாவது அலையில் கப்பல் மூலம்சென்னைத்துறைமுகத்தில்வந்துஇறங்கியவர்கள் தாங்கள்கொண்டுவந்தபொருட்களைநடைபாதையில் விற்கத் தொடங்கினார்கள். இதுவே பர்மா பஜாரின் தொடக்கநிலை. இவர்கள் 'பர்மா அகதிகள்' (Burma Refugees) என்று அழைக்கப்படுவதில்லை. அரசு ஆவணங்களில் இவர்கள் 'பர்மாவிலிருந்து திருப்பி அனுப்பப்பட்டவர்கள்' (Burma Repatriates) என்றே குறிப்பிடப்படுகிறார்கள். 1964இல் பர்மா அகதிகளாகக் கப்பலில் வந்து இறங்கிய இவர்கள் முதலில் கும்மிடிப்பூண்டி முகாம்களில் தங்கவைக்கப்பட்டனர். பிறகு வேலூரிலும் பர்மா முகாம் உருவானது.

சென்னைத் துறைமுகத்திற்கு வெளியே நடைபாதை வியாபாரிகளாக வாழ்க்கையைத் தொடங்கியவர்களுக்கு தமிழ்நாடு அரசு நடைபாதை வணிகத்திற்கு உரிமம் தந்து உதவியது. எனவே, 1964இல்தான் பர்மா பஜாருக்கான அடிக்கல் நாட்டப்பட்டது. 1967இல் ஏற்பட்ட அண்ணாவின் அரசும் அதற்குப் பிறகு உருவான கலைஞர் தலைமையிலான திமுக அரசும் பர்மா பஜார் வியாபாரிகளுக்கு உறுதுணையாக நின்று உதவி புரிந்தது. நடைபாதை வணிகர்கள் கடைக்காரர்கள் ஆனார்கள். நான்கடி அகலம், ஆறடி அகலம் உள்ள மரக்கட்டைகளால் ஆன கடைகள் உருவாயின.

இந்த மரத்தாலான கடைகளை அமைத்துக் கொடுத்தவர்கள் பர்மாவில் மரவேலை மற்றும் மர வணிகம் செய்து வந்த தமிழ்ச் செட்டியார்கள். இவர்களின் பூர்விகம் வேலூர், திருவண்ணாமலை பக்கம் என்கிறார்கள். பர்மாவிலிருந்து ஏதிலிகளாய் வந்தவர்களுக்கு அரசாங்கம் நேதாஜி நகரிலும் ஷர்மா நகரிலும் 1200 சதுர அடி கொண்ட மனைகளை அளித்தது. இந்தச் செட்டியார்கள் நேதாஜி நகரில் வீடு கட்டிக்கொண்டு ஷர்மா நகரில் தேக்குமர வியாபாரம் செய்து வந்தனர். இவர்கள் தொழிற்பட்டது பர்மா தேக்கு மரங்கள்.

இந்தச் செட்டியார்களின் மர வணிகம் குறித்து ஒரு விநோதமான செய்தி உலவுகிறது. பர்மாவில் வெட்டப்படும் தேக்கு மரங்கள் ஒரு குறிப்பிட்ட பருவ காலத்தில் கடலில் வீசப்படுமாம். அந்த மரக்கட்டைகள் காற்றின் வேகத்தில் கடலில் மிதந்து வந்து சென்னையில் பழவேற்காடு கடற்கரையிலோ கோவலம் பகுதியிலோ கரை ஒதுங்குமாம். அந்த மரக்கட்டைகளில் பொறிக்கப்பட்டிருக்கும் பிரத்யேக குறிகளை வைத்து கட்டைகளுக்குரிய வணிகர்கள் எடுத்துச் செல்வார்களாம். கடலில் மிதக்கும் கட்டைகளுக்கு என்ன பாதுகாப்பு! மிதக்கும் கட்டைகள் இந்த நீண்ட நெடிய பயணத்தில் வேறெங்கும் கரை ஒதுங்காதா? ஆற்றில் போட்டாலும் அளந்து போட வேண்டாமா? கடலில் போடுவதற்கு காவல் வேண்டாமா? கடல் கடந்து வணிகம் செய்தவர்கள் கடலலையில் கடை விரித்தார்களா? நம்ப முடிகிறதா?

ஆனால், இப்படி நடந்தது உண்மை என்று சாதிக்கிறார் மீரான்பாய். இவர் மயிலாடுதுறைக்கு அருகில் உள்ள ஆக்கூர் மதர்ஸாவில் பயின்ற இஸ்லாமியர். இன்று தமிழக பாரதீய ஜனதா கட்சியில் ஒரு பிரமுகர். இவரது தந்தை அப்துல்காதர் பர்மா பஜார் மறுமலர்ச்சி சங்கத்தின் செயலாளராக இருந்தவர். ராமநாதபுரம் மாவட்டம் கமுதிக்கு அருகில் உள்ள சுந்தரபுரம் இவரது பூர்விக ஊர். அங்கிருந்து பர்மாவுக்குச் சென்றவர். அப்துல்காதர் பர்மா பஜார் செயலாளராக இருந்த போது ராமநாதபுரத்தைச் சேர்ந்த யூசுப் தலைவராக இருந்தார். யூசுப் இருபது ஆண்டுகளுக்கு மேலாக தலைவராக நீடித்தவர். மீரான் பாயின் அண்ணன் சாகும் ஹமீது சங்கத்தின் துணைத் தலைவராக இருந்தவர். பர்மா அகதிகளுக்கு வழங்கப்பட்ட அடையாள அட்டையின் பேரில் தான் அரசாங்கம் பர்மா பஜாரில் கடை ஒதுக்கீடு செய்து வந்தது. அவரது கடை எண் 81. 1995இலிருந்து ஐந்தாறு ஆண்டுகள் பர்மா பஜார் சங்கத்தின் செயலாளராக பணியாற்றிய அப்துல் காதர் வடசென்னையில் எம்.கே.வி. நகர் உருவான காலத்தில் பர்மாவிலிருந்து தன்னுடன் வந்த பலருக்கு அரசாங்கத்தில் வீட்டு மனை பெற பெரிதும் உழைத்தவர்.

இந்தப் பின்புலத்திலிருந்து வந்தவர் மீரான் பாய் என்பதால் காற்றின் திசையும் விசையும் அறிந்த செட்டியார்கள் கடலலை மீது செய்து வந்ததாகக் கூறப்படும் மரக்கட்டை கதையை நம்ப வேண்டியிருக்கிறது. விரைவில் அப்படிப்பட்ட வணிகம் செய்த ஒரு செட்டியாரைச் சந்திக்க இருக்கிறேன்.

இன்று பர்மா பஜாரின் பெரும்பாலான கடைகள் இஸ்லாமியர் வசம் இருந்தாலும் அந்நாட்களில் இந்துக்களும் கணிசமான அளவுக்கு கடைகள் வைத்திருந்தனர். இவர்களும் முஸ்லீம்களும் இணைந்துநட்புறவோடுவியாபாரம்செய்துவந்தனர். நாவன்னா ஷண்முகம் என்ற அப்துல் காதரின் நண்பர் பர்மா பஜாருக்கு ஒரு பெரும்பலமாக நின்றார் என்று சொல்கிறார் மீரான்பாய். அவரது மகன் முனியாண்டி கடையை அறியாத சென்னை தொழிலதிபர்களோ திரைப்பட கலைஞர்களோ ஏனைய பிரபலங்களோ இல்லை. அந்தக் கடை மீது அவர்களுக்கு ஒரு மோகம், ஒரு மயக்கம். முனியாண்டி படையல் இல்லாத பெரும் வெற்றி விழா விருந்துகள் சென்னையில் நடந்ததில்லை.

பின்னர் எம்ஜிஆரின் ஆட்சிக்காலத்திலும் ஜெயலலிதாவின் ஆட்சிக்காலத்திலும் பர்மா பஜார் விரிவடைந்து வலிமை மிகுந்த ஒரு வணிகக்



பர்மா பஜார் (2023)

கூட்டமாக மாறியது. 'ஏ' பஜார், 'பி' பஜார், 'சி' பஜார் என்றிருந்த பர்மா பஜாரில் 'ஜேஜே' பஜார் உருவானது. உயர்நீதிமன்றத்தின் எதிரே மாலை மட்டும் இயங்க அனுமதிக்கப்பட்ட ஈவ்னிங் பஜார் தலையெடுத்தது. 'மரக்கட்டை' கடைகள் உருமாற்றம் பெற்று, இரும்பு ஷட்டர்களுடன் கூடிய கடைகளாயின. சென்னை மாநகராட்சி இந்தக் கடைகளை ஒதுக்கீடு செய்தபோது அவற்றின் ஆரம்பகட்ட விலை ரூபாய் ஐந்தாயிரம். இன்று பர்மா பஜாரில் ஒரு கடையின் விலை 25 லட்சம் ரூபாய்.

ஆரம்ப கட்டத்தில் அந்நியத் துணிமணிகளும் செருப்பு, பெல்ட், நகவெட்டி, பொம்மை, சிறு கத்தரிக்கோல், லண்டன் நைட் செண்ட், நேஷனல் ட்ரான்சிஸ்டர், பேனா, பென்சில், முகப் பவுடர், சிகரெட் இப்படிப்பட்ட பொருட்களே பர்மா பஜாரில் விற்பனையாகின. சீனியர் சுங்க அதிகாரி ஒருவர் பத்து இருபது செவன் ஓ கிளாக் (7'O Clock) பிளேடு பாக்கெட்டுகளைக் கைப்பற்றி வழக்குப் பதிவு செய்திருக்கிறார். என்னுடைய நண்பரான அந்த அதிகாரியை அவரது சம காலத்தவர்கள் விருந்து நிகழ்வுகளின்போது நையாண்டி செய்ததுண்டு.

சென்னைத் துறைமுகத்தில் வெளிநாட்டுக்குச் சென்றுவரும் பயணக் கப்பல்கள் தற்போது இல்லை. இதை எழுதிக் கொண்டிருக்கும்போது (14.10.2023) நாகைத் துறைமுகத்திலிருந்து இலங்கை காங்கேசன் துறைக்கு ஒரு கப்பல் கொடியசைத்துத் தொடங்கப்பட்டிருப்பதைத் தொலைக்காட்சியில் கண்டு மகிழ்ந்தேன்.

சிங்கப்பூர், மலேசியா நாடுகளுக்கும் சென்னைக்கும் இடையே இதுவரை மூன்று பயணியர் கப்பல்கள் இயங்கியிருக்கின்றன. 'ஸ்டேட் ஆஃப் மெட்ராஸ்' என்ற கப்பலும் 'ரஜூலா' என்ற கப்பலும்தான் சென்னைத் துறைமுகத்திலிருந்து மலேசியா, சிங்கப்பூர் நாடுகளுக்குச் சென்றுவந்த முதற்கட்டப் பயணியர் கப்பல்கள். 'ஸ்டேட் ஆஃப் மெட்ராஸ்' கப்பல் 'ஷிப்பிங் கார்ப்பரேஷன் ஆஃப்' இந்தியாவுக்குச் சொந்தமானது. 'பிரிட்டிஷ் இந்தியா லைன்' என்ற நிறுவனத்தால் 'ரஜூலா' இயக்கப்பட்டு வந்தது. இந்த இரு கப்பல்களில் 'ரஜூலா' பயணம் மேலானது என்பார்கள். என்ன மேலானது! அதிலும் மூன்றாம் வகுப்பில் பயணம் செய்தால் மூச்சு முட்டும், உடம்பு சூடேறும். பேருக்குத்தான் வெளிச்சமும் காற்றோட்டமும்.

இக்கப்பல்கள் சிங்கப்பூர் சென்று சென்னையை வந்தடைய இரண்டு வாரங்களாகும். 1960களில் இயங்கிய இந்தக் கப்பல்களின் போக்குவரத்தினால் பர்மா பஜாரின் வர்த்தகம் வளர்ச்சி பெற்றது. பஜார் வியாபாரிகள் சிலர் சிங்கப்பூர் செல்லத் தொடங்கினர். 1970களில் ஷிப்பிங் கார்ப்பரேஷன் 'சிதம்பரம்' என்ற கப்பலை வ.உ.சியை நினைவு கூர்ந்து சிங்கப்பூருக்கு இயக்கியது. 'சித்மபரம்' கொஞ்சம் வேகமாக ஓடியது; ஏறக்குறைய ஒரு மாமாங்க காலம் ஓடியது; 700 பயணிகளையும் நூற்றுக்கும் மேற்பட்ட கப்பல் பணியாளர்களையும் சுமந்துகொண்டு ஓடியது. 'சிதம்பரம்' கணிசமான பஜார்காரர்களுக்குப் பயணத்திற்கும் வளமான வாழ்க்கைக்கும் வழிவகுத்து வந்தது. மூச்சிறைக்க ஓடிய சிதம்பரத்தில் 1985ஆம் ஆண்டு பிரவரி 12ஆம் தேதி தீப்பிடித்தது. சென்னைத் துறைமுகத்திலிருந்து 100 மைல் தூரத்தில் கப்பல் வந்துகொண்டிருந்தபோது

இந்தத் தீ விபத்து நிகழ்ந்தது.

சிதம்பரம் கப்பல் சென்னைத் துறைமுகத்தை வந்தடைந்தவுடன் ‘நார்த் க்வே’ (North Quay) என்ற தளத்தில் நிலைநிறுத்தப்படும். கப்பலின் கடைசிப் பயணி சுங்கச் சோதனை முடித்து வெளிவர இரண்டு மூன்று நாட்களாகும். சிதம்பரம் கப்பல் முதலில் நாகைத் துறைமுகத்திற்குக் கிழக்கே கடலில் நங்கூரமிட்டு நிறுத்தப்படும். நாகைத் துறைமுகத்திற்கு வரவேண்டிய பயணிகள், படகுகள் மூலம் கரைக்குக் கொண்டு செல்லப்படுவார்கள். சென்னையிலிருந்து சில சுங்க அதிகாரிகள் நாகை சென்று கடலில் நிற்கும் கப்பலில் ஏறி, கப்பல் சென்னை வரும்வரை பயணிகளைக் கண்காணித்து வருவார்கள். ‘சிதம்பரம்’ சென்னை வந்தால் துறைமுகம் விழாக்கோலம் பூணும். சிதம்பரம் கப்பலில் பணியாற்றும் நூற்றுக்கும் மேற்பட்ட சிப்பந்திகளில் சிலர் துறைமுகத்திலிருந்து வெளியே செல்வதும் உள்ளே வருவதுமாக இருப்பார்கள். அந்தச் சிலர் சட்டைக்கு மேல் சட்டையும், பேண்ட்டுக்கு மேல் பேண்ட்டும் அணிந்து வெளியேறி, திரும்பும்போது ஒற்றைச் சட்டை ஒற்றை பேண்ட்டுடன் வருவார்கள். இப்படி வெளிநாட்டுப் பொருள்கள் கப்பலிலிருந்து வெளியேறிச் சந்தைக்குச் செல்வதுண்டு. இவை இறுதியில் பஜாரில் விற்பனையாகும். கைக்கடிகாரங்கள்தான் அன்றைக்குக் கடத்தல்காரர்களுக்குக் கை கொடுத்திருக்கின்றன.

இலங்கையிலிருந்து பயணிகள் மூலம் கொண்டுவரப்படும் கிராம்பும் பஜாரில் விற்பனைக்கு வரும். 1980களில் இலங்கை அதிபர் ஜே.ஆர். ஜெயவர்த்தனே இலங்கை வணிகத்தை அரசின் கடுமையான கட்டுப்பாடுகளிலிருந்து விடுவித்து ‘திறந்த சந்தை’க்கு வழி வகுத்தார். சிங்கப்பூரைப் போன்ற பொருளாதாரச் சந்தை இலங்கையில் உருவாக ஆரம்பித்தது. அப்போதுதான் கொழும்பு சென்று திரும்பும் பயணிகள் மூலம் சோனி டிவிகள் சென்னைக்கு வர ஆரம்பித்தன. இந்த டிவிகளின் வருகை குறித்து இந்திய டிவி நிறுவனங்கள் பதற்றமடைந்தன. இந்த டிவிகளைச் சந்தைப்படுத்தும் மையமாக பஜார் இயங்கியது.

1985க்குப் பிறகு விமானப் பயணம் எளிதானது. எமர்ஜென்சி காலம் முடிவடைந்து மொரார்ஜி தேசாய் பிரதமரான பின்னர் பாஸ்போர்ட் பெறும் வழிமுறைகள் எளிதானதும் இதற்கான காரணம் என்று சொல்கிறார்கள் சில பழுத்த பஜார்காரர்கள்.

கேசியோ கால்குலேட்டர்களும் காமிராக்களும் சைனா சில்க் புடவைகளும் பஜாரை ஆக்கிரமிக்கத் தொடங்கின. மிகப் பெரிய மியூசிக் சிஸ்டம் மக்களின் ஆடம்பரப் பொருளானது.

1980களில் விசிஆர், விசிடி காசட்டுகள் விற்பனை முழுவீச்சில் நடைபெற்றன. இவை இன்று இருக்குமிடம் தெரியவில்லை. சென்னை நகர் முழுதும் வீடியோ காசெட்டுகளை வாடகைக்குத் தரும் வீடியோ லைப்ரரிகள் முளைத்திருந்தன. நடிகர்கள், இயக்குநர்கள், உதவி இயக்குநர்கள் எல்லாம் உயர்தர வீடியோ கடைகளில் தென்படுவதுண்டு. மாரியம்மன் கோயில் திருவிழாக்களில்கூட ‘டெக்’ மூலம் திரைப்படங்கள் ஒலிபரப்புவார்கள். விசிஆர் என்பது பொது வழக்கில் ‘டெக்’ என்று அழைக்கப்பட்டது. தனியார் பேருந்துகளிலும் விசிஆர் மூலம் திரைப்படங்கள் ஓடும். அத்தகைய பேருந்துகளை வீடியோ கோச் என்று சொன்னார்கள். வீடியோ கோச்சுகள் இன்னும் நவீனமாகி ஸ்லீப்பர் கோச்சுகளாகிவிட்டன. வோல்வோ பஸ்கள் நலுங்காமல் குலுங்காமல் பயணிக்க விரும்பும் வசதிமிக்கவர்களுக்கான ஊர்திகளாகிவிட்டன.

1985இல் சென்னைத் துறைமுகத்திற்கு வந்த இன்டெர்சிட்டி என்றொரு கப்பல் சுங்க அதிகாரிகளின் முற்றுகைக்கு ஆளானது. அக்கப்பலில் மறைத்து வைக்கப்பட்டிருந்த நூற்றுக்கணக்கான விசிஆர்கள் கைப்பற்றப்பட்டன. அந்தக் கப்பலின் மீகாமன் (கேப்டன்) பிலிப்பைன்ஸ் நாட்டைச் சேர்ந்தவர். அவரை பிலிப்பைன்ஸ் பீமன் என்று சொல்லலாம். அவ்வளவு பெரிய உடம்பு. தனது முதல் காதலி கடல் என்று சொன்னார். விசாரணை நடந்து முடிந்த கையோடு அவர் சென்னை மத்திய சிறைச்சாலைக்கு அனுப்பி வைக்கப்பட்டார். சரியாக ஏழு ஆண்டுகள் கழித்து அதே கேப்டனை மீண்டும் சந்திக்கும் வாய்ப்பு ஏற்பட்டது. சந்தித்த இடம் தூத்துக்குடி துறைமுகம். அல்காரா என்ற கப்பல் துபாய் துறைமுகத்திலிருந்து தூத்துக்குடி நோக்கி வந்துகொண்டிருந்தது. அதில் 99 வெள்ளிக்கட்டிகள் மறைத்து வைக்கப்பட்டிருந்தன. அந்தக் கப்பலைக் கடலோரக் கப்பற்படை இடைமறித்துத் தூத்துக்குடி துறைமுகத்திற்குக் கொண்டுவந்தது. அப்போது நான் மத்திய வருவாய் புலனாய்வுத் துறையில் பணியாற்றி வந்தேன்.

தூத்துக்குடியில் முகாமிட்டிருந்த நாங்கள் அல்காரா கப்பலுக்குச் சென்றோம். கடலோரக் கப்பல் படையின் தலைவர் கப்பலை முழுமையாகச் சோதனையிட்டதாகவும் கடத்தல் பொருளைக் கண்டெடுக்க முடியவில்லை என்றும் சொன்னார். அல்காரா கப்பலின் கேப்டனை எங்கள் முன் கொண்டுவந்து நிறுத்தினார். நின்றது அதே இன்டர்சிட்டி கேப்டன். அவரிடம் தீவிர விசாரணை நடத்தப்பட்டது. இன்டர்சிட்டி கப்பல் கேப்டனாக கடத்தல் குற்றத்திற்காகக் கைதான சம்பவத்தை எடுத்துரைத்தேன். கொஞ்சம் கலங்கி, கொஞ்சம் மயங்கி இறுதியில் பொருள் இருக்கும் இடத்தைச் சொன்னார். நங்கூர சங்கிலி அறையில், கீழே வெள்ளிக் கட்டிகளையடுக்கி வைத்துவிட்டு நங்கூர இரும்புச் சங்கிலியை அவற்றின் மேல் மலைப்பாம்பைப் போல இயந்திரம் மூலம் சுற்றி வைத்திருக்கிறோம் என்றார். தன்னை கேப்டனாக இயங்க அனுமதிக்குமாறு வேண்டினார். பிறகு கப்பல் பணியாளர்களுக்கு உத்தரவுகள் பிறப்பித்தார். இயந்திரம் மூலம் நங்கூர



சங்கிலி கடலில் இறங்கியது. சங்கிலி அறையின் தளத்தில் வெள்ளிக்கட்டிகள் பிரகாசித்தன.

அந்தக் கப்பல் தலைவனுக்கு ஏழு பிள்ளைகள். எல்லோரும் வெவ்வேறு நாடுகளில் வசதி வாய்ப்புகளுடன் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். அவருக்குப் பணம் சம்பாதிக்க வேண்டிய அவசியம் ஏதுமில்லை. 'ஏன் கடத்தல் கப்பல்களில் பணிபுரிகிறீர்கள்? குறைந்த வயதுக்காரரும் இல்லை' என்று கேட்டபோது அவர் சொன்னார், "நான் கடலில் பிறந்தவன். கப்பலில் வளர்ந்தவன். காசு பெரிதல்ல; கப்பல் பணி மீதான என் காதல் பெரிது. வயது முதிர்ந்த நிலையில் கடத்தல் கப்பல்கள்தான் என்னை வரவேற்கின்றன. நான் கடலிலே சாக விரும்புகிறேன்."

வாழ்ந்து பழகியதே வாழ்க்கை ஆகிறது. ஆசைப்பட்டதையே அடைய நினைக்கிறது மனசு. சட்டமும் விதிகளும் ஆசையில் வாழும் மனசுக்கில்லை. இது பஜார் வியாபாரிகளுக்கும் பொருந்தும்

எண்பதுகளில் பஜாரின் முகமாக இருந்த விசிஆர் மறைந்துபோயிற்று. ஆளும் அரசின் பொருளாதாரக் கொள்கைகளுக்கு ஏற்ப பர்மா பஜாரின் நிறம் மாறும்; கையாளும் பொருட்களும் மாறும்.

1995 ஜூலை 21ஆம் நாள் மேற்கு வங்கத்தின் அன்றைய முதல்வர் ஜோதிபாசு இந்தியாவில் முதன்முதலாக செல்போனில் பேசி அலைபேசி சேவையைத் தொடங்கிவைத்தார். அலைபேசி யுகம் ஆரம்பித்தது. பர்மா பஜாரின் கடைகளும் மொபைல் விற்பனையில் நாட்டம் கொண்டன. மொபைல் இறக்குமதி வரி குறைகிறபோது மொபைல் கம்பெனிகளின் விற்பனை மையங்களுடன் போட்டிபோட முடியாத சூழலில் வேறு புதிய வரவுகளைத் தேடிக்கொண்டது பர்மா பஜார்.

2000ஆம் ஆண்டு வரை திருட்டு விசிடிகள் திரைப்படத் துறைக்குப் பெரும் சவாலாக இருந்தன. அவை அப்பளக்கட்டுகள் போல் மலேசியாவில் இருந்து வரும் பயணிகள் மூலம் வந்திறங்கின. பர்மா பஜார் முழுவதும் சிடி கடைகளாகத் தோற்றமளித்த காலமும் உண்டு.

மறைமுக வியாபாரிகளாக அறியப்பட்டவர்கள் கிரெடிட் கார்டு மூலம் பொருட்கள் வாங்கி விற்கும் நிலைக்கும் தள்ளப்பட்டார்கள். அமேசான் இந்தியா விழாக் காலங்களில் அதிரடி சலுகைகளை அறிவிக்க ஆரம்பித்தது. டிஜிட்டல் டிவிகள் எண்ணிப் பார்க்க முடியாத அளவுக்குக் குறைந்த விலையில் அமேசான் இணைய தளத்தில் விற்கப்பட்டது. அவற்றை அதிக எண்ணிக்கையில் வாங்கி இருப்பில் வைத்துக்கொண்டு விலை ஏறுகிறபோது நல்ல லாபத்திற்கு விற்கத் தொடங்கினார்கள்.

கள்ள மார்க்கெட் என்று கருதப்பட்ட பஜாரின் விற்பனை முகமும் காலத்திற்கு ஏற்ப மாறியது. டிஜிட்டல் பரிவர்த்தனைக்கும் இசைந்துபோக வேண்டிய கட்டாயம் உண்டானது. உலக அரங்கில் நிலவும் அரசியல் பிரச்சனைகளால் ஏற்படும் பாதிப்புகளை உணர்ந்தும் தீர்மானித்தும் செயல்படும் இவர்கள் படிக்காத பொருளாதார நிபுணர்கள்.

(தொடரும்)

சந்தியா நடராஜன் <sandhyapathippagam@gmail.com>

# செம்மண் பூமி

எம்.டி. வாசுதேவன் நாயர்
தமிழில்: தி.இரா. மீனா
ஓவியம்: ஜிதேந்தர் தன்வார்

மதிய நேரச் சூரியனின் உக்கிரத்தில் இன்னமும் கருங்கல் தளங்கள் தகித்துக் கொண்டிருந்தன. சுற்றுலா வந்திருந்த குழு தம் காலணிகளை மிக அவசரமாக உதறியெறிந்து விட்டு பெரிய கதவிற்கு அப்பாலான தங்குமிடத்தை நோக்கி ஓடியது.

தன் காலணிகளைக் கழற்ற அவன் அதிக நேரம் எடுத்துக்கொண்டான். அதனால், மறையும் வசந்த காலத்தின் பசுமையில், ஒற்றையாய் நின்ற மலர் போல மதிய சூரிய ஒளியில் அவள் காத்திருந்தாள். தன் வெற்றுப் பாதங்களுக்குள் கருங்கல் தளங்களின் சூடு ஊடுருவதை உணர்ந்து, நின்றிருந்தாள். குளுமையாக இருந்த தன் வெற்றுப் பாதங்களை அந்தக் கொதிக்கும் கருங்கல் தளத்தின் ஓரம் முதலில் தொட்டபோது ஒருவித சிலிர்ப்பை அவளால் உணர முடிந்தது. அந்தச் சிலிர்ப்பே தாங்க முடியாத வலியைத் தர தன்னை அமைதியாக கட்டுப்படுத்திக்கொள்ள முயன்றாள். தனக்குள்ளாகவே மெதுவாகப் பேசிக்கொள்ளும் தன்னுடைய புதிய திறமையை நினைத்துப் பார்த்து சிரித்துக்கொண்டாள். பஞ்சாக்னி தவம் செய்தவள் பார்வதி தேவி. மதிய சூரியன் கக்குகிற தகிப்பை ஒரு பதிவிரதை, கற்பான பெண் பொறுத்துக்கொள்ள மாட்டாளா?

ஒருவழியாகத் தன் காலணிகளைக் கழற்றிவிட்டு, முகத்தில் வழிந்த வேர்வையைத் துடைத்துக்கொண்டு வேகமாக அவளை நோக்கி வந்தான். ஆனால், அவள் முன்னே போகவில்லை.

“வா, வா, பாதங்கள் எரிகின்றன.”

தம் குழுவிலிருந்து தனியாகி விடக்கூடாது என்பதற்காக அவன் வேகமாகக் கோயிலுக்குள் நடந்தான், அவள் இன்னமும் பின் தங்கி இருந்தாள். வழிகாட்டியின் எதிரொலிக்கும் குரலை அவளால் கேட்க முடிந்தது. அந்த தோற்றத்திற்கு மிகப் பொருத்தமான ஒரு குரல்.



“தொலைவில், அந்த மூன்று கடல்கள் சங்கமிக்கும் இடத்தில் தேவி தியானத்தில் அமர்ந்திருந்தாள். இங்கு, சுசீந்திரத்தில் இருந்து கடவுள் தேவியைப் பார்த்துப் பரவசமடைந்தார்.”

அவனுடைய நெற்றியிலிருந்த சந்தனம் வியர்வையில் முழுமையாக அழிந்திருந்தது. கருங்கல் தளத்தில் ஓர் அரக்கனின் சிலையாகத் தூங்கிக் கொண்டிருந்த அவன் இப்போது உயிரோடு எழுந்து வந்துசுற்றுலாப் பயணிகளோடு சேர்ந்துகொண்டதாக அவள் கற்பனை செய்துகொண்டாள். அவனுடைய கண்களின் சிவப்பு நரம்புகள் தெளிவாகத் தெரிய, பார்வை ஒவ்வொரு முகத்திலும் தாவ, நன்றாக தான் மனனம் செய்த வாக்கியங்களை வாய் ஒப்பித்தது.

அவள் பின்தங்கிய போது துணைவன் அவளைக் குழுவோடு சேர்ந்துகொள்ள வற்புறுத்தினான். பெரிய பலகையில் இருந்த எண்களைப் படித்துவிட்டு குழந்தைக்குச் சொல்வதுபோல அவளுக்காக அதைத் திருப்பிச் சொன்னான்.

“கன்னிப் பெண்ணான தேவி திருமணம் செய்துகொண்டால் தன் தெய்வீக சக்தியை இழந்துவிடுவாள் என்று கடவுளர்கள் நினைத்தனர். அந்தத் திருமணத்தை தடுத்துவிட வேண்டுமென முடிவு செய்தனர்.”

வெற்றுக் கருங்கல் மாதிரியான வழிகாட்டியின் உடல் வியர்வையில் மினுமினுத்தது. குழந்தைப் பருவத்தில் தனது வீட்டுக்குப் பேயோட்ட வந்த மந்திரவாதியின் ஞாபகம் அவளுக்கு வந்தது.

எப்படி அவள் எதிர்வினையாற்றுகிறாள் என்பதைத் தன் கனமான கண்ணாடியினூடே அவன் கவனித்துக் கொண்டிருப்பதை உணர்ந்த அவள், பலகையிலுள்ள பெயர்களை அடையாளம் காண முயல்வது போல நடித்துக் கொண்டிருந்தாள்.

“திருமண நிகழ்வுகள் விடியற்காலையில் நல்ல நேரத்தில் எப்படி நடைபெற வேண்டும் என்பது பற்றி முடிவு செய்தனர். அந்தக் கணம்தான் மிக நல்ல நேரம் என்பதில் பண்டிதர்கள் கவனமாக இருந்தனர்.



குறிப்பிட்ட நேரத்தில், மூன்று கடல்கள் சங்கமிக்கும் இடத்தை அடைய மாப்பிள்ளை சிவன் புறப்பட்டார். அவர் வரும் வழியில் தேவேந்திரன் ஒரு சேவல் வடிவத்தில் வந்து நின்று கூவ, மங்கலமான நேரம் முடிந்துவிட்டதாக நினைத்து சிவன் ஏமாற்றத்தோடு திரும்பிப் போய்விட்டார்."

"பிறகு தேவிக்கு என்ன ஆனது?"

அனைவரும் திரும்பி அவளைப் பார்த்தனர். தான்தான் அந்தக் கேள்வியைக் கேட்டோமா? அவள் ஆச்சர்யப்பட்டாள்.

"இங்கே பார்; இதைப் பார்."

அவன் எப்போதெல்லாம் பொறுமையற்றுப் பேசுகிறானோ அப்போது அவன் உதட்டில் உமிழ்நீர் கொப்பளிக்கும்.

"பிறகு தேவிக்கு என்ன ஆனது?"

வழிகாட்டியின் சிவப்பு நரம்பு கண்கள் எல்லாரையும் பார்த்துவிட்டு அவள் மேல் நிலைத்தன. ரத்தச் சிவப்புக் கண்கள் சிரித்தன.

"தேவி தன் கழுத்திலிருந்த கல்யாண மாலையை பிய்த்து, துண்டுகளாக்கி எறிந்தாள். பந்தலைச் சாய்த்து கீழே தள்ளினாள். திருமணத்திற்காகச் சமைக்கப்பட்ட விருந்துச் சாப்பாடு அவற்றில் கலந்து மூழ்கி மண்ணின் நிறத்தை மாற்றிவிட்டது. அப்போதிலிருந்து கன்னியாகுமரியின் மண் செந்நிறமாகி விட்டது."

"வா, வா இங்கே."

கையிலுள்ள கேமராவை திறந்துகொண்டு அவளைத் திரும்பவும் கூப்பிட்டான். அவனுடைய பருத்த முகத்தில் வெளிப்பட்ட அசட்டுச் சிரிப்பு

ரகசியமான ஓரிடத்திற்கு அவளை அழைப்பது போலிருந்தது.

"இந்தப் பின்னணியில் நாம் ஒரு புகைப்படம் எடுத்துக்கொள்ளலாம் வா. மிக நன்றாக இருக்கும். அங்கே, அங்கேயே நில். லேசாக இடதுபுறம் நகரவேண்டும். சரியாக இருக்கிறதா என்று நான் பார்க்கிறேன்."

கூட்டம் நடன அரங்கத்திற்குள் போனது. வீட்டிலுள்ள அழகான பெண்கள், தாம் விரும்பும் ஒரு நிகழ்ச்சியை யார் கண்ணிலும் படாமல் பார்க்கிற வகையில், ஜன்னல்கள் அமைக்கப்பட்டிருப்பதை வழிகாட்டி பெரிய குரலில் விளக்கிக்கொண்டிருந்தார்.

"ஒரு முறை சிரி, தயவுசெய்து சிரி."

சுற்றுலாப் பயணிகளின் தலைகளை மீறித் தெரிந்த சிவந்த கண்களை உடைய அரக்கனை அச்சத்தோடும் அதிசயமாகவும் பார்த்தாள்.

"ரெடி. ஒரு முறை. தயவுசெய்து சிரி."

கேமராவின் க்ளிக் சப்தம் கேட்டு அவள் திரும்பினாள்.

அந்தப் பருத்த உதடுகள் நடுங்குவதையும் உதட்டோரத்தில் உமிழ்நீர் கொப்பளிப்பதையும் பார்த்தாள். தன் கோபத்தை அடக்கிக்கொள்ளும் முயற்சியின்போது அவன் எப்போதும் இப்படித்தான் இருப்பான். அவள் அடக்கமுடியாமல் சிரித்தாள்.

"நீ அப்போது சிரிக்கவில்லை. எப்போதும் தவறான சந்தர்ப்பத்தில்தான் சிரிப்பாய்."

அவள் நகர்ந்தாள். வாயில் கருங்கல் பந்தோடிருந்த கல்யானையோடு தானாகப் பேசிக்கொண்டிருப்பதை உணர்ந்தான். திரும்பவும் அவள் அடக்க முடியாமல் சிரித்தாள்.

பயணிகள் கூடினர். சிலர் வழிகாட்டிக்குப் பணம் கொடுத்தனர். அவள் எதுவும் சொல்வதற்கு முன்பே, "இதற்காகப் பணம்! இந்த விஷயங்கள் எல்லோருக்கும் தெரிந்ததுதான்" என்றான்.

பஸ்சில் ஏறி வேகமாக ஓர் இருக்கையைப் பிடித்தான். வேர்வையில் ஊறிக் கொண்டிருக்கும் அந்த பிரவுன் சட்டையின் மீது பட்டு விடாமல் காலியான இருக்கையின் பாதிப் பகுதியில் மிக கவனமாக உட்கார்ந்தாள்.

பஸ் நிரம்பியது. அவர்களுடைய முன்னாள் வழிகாட்டி ஏறிக்கொண்டு விசிலை ஊதினான். இரும்புக் கம்பியைக் கெட்டியாக பிடித்தபடி அவர்களின் முன்னால் நின்றான். அவளுடைய துணைவன் அவளைச் சிரிக்க வைக்கவேண்டும் என்ற எண்ணத்தில் இருப்பவன் போல, "நீ நீக்ரோவைப் பற்றி கேள்வி மட்டுமே பட்டிருக்கிறாய். இப்போது நீ ஒருவனைப் பார்க்கலாம்" என்றான்.

ரத்தச் சிவப்பு நரம்பு படர்ந்திருந்த கண்களை அவளால் பார்க்க முடியவில்லை. அவன் தூரத்தில் எதையோ வெறித்துக் கொண்டிருந்தான்.

அவர்களின் முன்னாலிருந்த ஓர் இளைஞன் வாசித்துக் கொண்டிருந்த மவுத் ஆர்கனின் ஒலிக்கேற்றபடி அவள் கால்கள் தாளமிடுவதை அவள் துணைவன் கவனித்துக் கொண்டிருந்தான். கடலின் ஆரவாரம் ஓரளவு குறைந்த பிறகு, "சோர்வாக இருக்கிறயா?" என்று கேட்டான்.

அவள் தலையாட்டினாள். ஆம் அல்லது இல்லை என்பதாக அதன் அர்த்தமிருக்கலாம்.

"எனக்கு எப்போதும் கடல் மிகவும் பிடிக்கும். விடுமுறையில் உன் அண்ணனுடன் நான் முதன்முதலில் உங்கள் வீட்டுக்கு வந்தபோது நாம் கடற்கரைக்குப் போயிருந்தோம். உனக்கு ஞாபகமிருக்கிறதா?"

அவள் கண்களை மூடிக்கொண்டு உட்கார்ந்திருந்தாள்.

"உனக்கு எதுவும் ஞாபகமிருக்காது. நான் உன்னை முதன்முதலில் பார்த்ததும் கூட."

அவள் புன்னகைக்க முயற்சித்தாள்.

"நாம் எல்லோரும் ஒன்றாகப் போனோம். அப்போது நீ குழந்தையாக இருந்தாய். உனக்கு ஞாபகமிருக்காது."

தொலைவில் கடந்து கொண்டிருந்த பனைமரங்களின் இலைகளைப் பார்த்தபடி மௌனமாக இருந்தாள்.

"நீ தரையில் புரளுமளவுக்கான பெரிய வெள்ளை நிற ஸ்கர்ட்டும் பச்சை நிற மேல்சட்டையும் அணிந்திருந்தாய். அது உனக்கு ஞாபகமிருக்காது. உன் அக்கா புடவை அணிந்திருந்ததும் உனக்கு ஞாபகமிருக்காது."

எனக்கு ஞாபகமிருக்கிறது. அக்காவின் கையைப் பிடித்துக்கொண்டு நீ அலைகளில் நடந்தாய். புகைப்படம் எடுத்துக்கொண்டாய். அவள் தலைமேல் தெறித்த அலைகளின் தண்ணீர்த் துளிகளைத் துடைத்தாய்.

"நீ கடலுக்குள் வரவேயில்லை. உனக்கு பயம்."

நான் தென்னையின் நிழலில் உட்கார்ந்திருந்தேன். 'ஸ்ரீராமன் ஒரு திருடன்' என விரல்களால் மண்ணின் மீது எழுதினேன். அதைத் திரும்பத் திரும்ப எழுதினேன். ஒரு பெரிய அலை வந்து அதை அழித்து, உங்கள் எல்லோரையும் விழுங்கி விடுமென நினைத்தேன். எந்த அலையும் வந்து அழிக்கவில்லை, நான் எழுதியது தங்கிவிட்டது.

தொலைவிலிருந்த கடலைப் பார்த்த அவன், "ஓ! எவ்வளவு அழகு!" என்றான்.

"யார்? என் அக்காவா?"

"என்ன... இல்லை, கடல்."

சூரியாஸ்தமனம் பார்க்க சிறுசிறு குழுக்களாக



வந்து, இங்குமங்கும் நின்றிருந்தவர்கள் அவர்களைக் கடந்து திரும்பிச் சென்றனர். அவர்கள் ஹோட்டலை அடைந்த போது அவனுக்கு மூச்சு வாங்கியது.

பெட்டிகளைத் தூக்க வந்த பையனிடம் அவன் சொன்ன விவரங்களில் அவள் கவனம் காட்டவில்லை. ஜன்னல் திரைச்சீலைகள் காற்றில் படபடத்து ஒதுங்க, அவள் கடலைப் பார்த்தாள். செம்பூமி.

“உன் அக்காவைப் பற்றிய தேவையற்ற கருத்துக்கள்...” அவர்கள் தனியாக இருந்தபோது அவன் கேட்டான்.

“நான் எதுவும் சொல்லவில்லை.”

“நீ எதுவும் சொல்ல மாட்டாய், அதுதான் எனக்குப் பிரச்னை.”

அவன் முகம் ரத்தச் சிவப்பானது. வியர்வை வழிந்தது. அவள் பெட்டியைத் திறந்து மருந்து பாட்டிலை எடுத்தாள். மனதை அமைதிப்படுத்தும் இரண்டு மாத்திரைகளை நடுங்கும் அவன் கையில் கொடுத்தாள். அவன் அதை விழுங்கிவிட்டுச் சிறிது தண்ணீர் குடித்தான். மூச்சுச் திணறல், அவன் படுத்துக்கொண்டான்.

புடவையை மாற்றிக்கொண்டு, முகத்தில் பவுடர் போட்ட போது அவனுடைய களைத்த விழிகள் தன்னைக் கேள்வி கேட்பதை உணர்ந்தாள்.

“நான் சிறிது நடந்துவிட்டு வருகிறேன். ஓய்வு எடுத்துக்கொள்ளுங்கள். நான் சிறிது உலாவிவிட்டு வருகிறேன்.” கதவருகே போய் நின்றுகொண்டு திரும்பிப் பார்க்காமல் திரும்பவும் சொன்னாள்.

கடற்கரையை ஒட்டிய பாதையில் போடப்பட்டிருந்த பெஞ்சில் வழிகாட்டி தனியாக உட்கார்ந்திருப்பதைப் பார்த்தாள். எதிரில் இன்னொரு பாதையிருந்த போதிலும் அவள் பெஞ்சை ஒட்டிய பாதையில் போனாள். நீக்ரோ திடீரென ஓர் அரக்கனைப் போல எழுந்தான், தலை வானத்தைத் தொடுவதாக இருந்தது. தன் கைகளைக் கூப்பி, “நமஸ்காரம்” என்றான்.

மிக ஏற்றமான குரல்; நாட்டுச் சரக்கின் வாசம்; சிவப்பு ஜுவாலையாகக் கண்கள். அவனைச் சிறிதும் பொருட்படுத்தாமல், தன்னால் இயன்றவரை கவனமற்றவள் போல தலையை நிமிர்த்தி நடந்தாள்.

எதிரே மணல் மேடுகள் இருந்த பாதையின் முனையில் உட்கார்ந்தாள். மேலே வானத்தில் செங்கீற்றுகள். கடற்கரையில் யாருமேயில்லை. எப்போதோ அங்கு போடப்பட்ட அந்தப் பந்தலைப் பற்றிக் கனவு கண்டாள். அலங்கரிக்கப்பட்டிருந்தவைகள் கிழிக்கப்பட்டு, நொறுக்கப்பட்ட நகைகள் தூக்கி எறியப்பட்டு, விருந்துணவு காலால் உதைத்துத் தள்ளப்பட்டு, தன்னைச் சுற்றி பூமியில் சிதறிக் கிடந்ததைப் பார்த்தாள்.

திரும்பிப் பார்க்க அவள் பயப்பட்டாள். ஹோட்டல் அறையில் தன் அறையின் ஜன்னலில் விளக்கு வெளிச்சம் இருக்கிறதா என்று அவள் அறிய வேண்டும். சிமிண்ட் பெஞ்சில் தியானத்தில் இருந்த அந்த குடி போதை அரக்கன் எழுந்துவிட்டானா என்பது கூடப் பெரிதில்லை.

காலில் நற நறவென மண் மிதியுண்டது. அரக்கன் அருகே வர பீடி மூன்றாவது கண்ணாக ஒளிர்ந்தது. காலியான கடற்கரை அவன் காலடியில் நடுங்கியது.

அவனுக்குப் பின்னால், ஹோட்டல் அறையின் விளக்கு பிரகாசமாய்த் தெரிந்தது. அவள் தன் முழங்கைகளை செம்மண்ணிற்குள் அழுத்திக்கொண்டு தன் முகத்தை வானத்தை நோக்கி உயர்த்தினாள். கனமான பாதங்களின் ஒலி அருகே அருகே வருவதை உன்னிப்பாகக் கவனித்தாள். தன் சக்தி முழுவதையும் இழந்தவள் போல, கண்களை மூடிக்கொண்டு படுத்திருந்தாள்.

*நன்றி:* KUTTIEDATHI AND OTHER STORIES, ORIENT BLACK SWAN PVT LTD, *ஆங்கிலத்தில்: வி. அப்துல்லா*

---

எம். டி. வாசுதேவன் நாயர், மலையாள இலக்கிய உலகின் மிகச் சிறந்த படைப்பாளிகளில் ஒருவர். சிறுகதை, நாவல், பயண இலக்கியம், குழந்தை இலக்கியம், இலக்கியத் திறனாய்வு உள்ளிட்ட பல துறைகளில் பங்களிப்புச் செய்தவர். திரைப்படத் துறையிலும் சாதனை நிகழ்த்தியவர். இவரது ‘மஞ்சு’, ‘காலம்’, ‘ரண்டாம் மொழம்’ ஆகியவை சிறந்த நாவல் வரிசையிலும் ‘வானப்பிரஸ்தம்’, ‘ஓளவும் தீர்வும்’, ‘பந்தனம்’, ‘குட்டியேடத்தி’ உள்ளிட்டவை சிறுகதை வரிசையிலும் சிறப்பானவையாக மதிப்பிடப்படுகின்றன. வயலார், வள்ளத்தோள், எழுத்தச்சன், சாகித்ய அகாதெமி, ஞானபீடம் உள்ளிட்ட பல விருதுகள் பெற்றவர்.

தி.இரா. மீனா <meenmix@yahoo.com>

# ரவி சுப்பிரமணியன் கவிதைகள்

ஓவியம்: Thuraya Al-Baqsimi



## 1. நாள் என் செயும்

பிளாக் செய்ய முடியாதவர்கள்
ஏற்கனவே குறுந்தகவலில்
சந்திக்க நேரம் கேட்டிருந்தனர்

எவரையும் தவிர்க்க விரும்பவில்லை
சாத்தியமும் இல்லை

வாருங்கள் மிஸ்டர் துயரே
என்று இப்போதைக்கு வந்த
அந்தக் கடைசி திருவாளரையும்
வரவேற்றேன்

அவர் வேஷ்ட்டி சட்டையில்
கூப்பிய கரத்துடன் வந்தார்

ஏற்கனவே
விதவிதமாய் வந்திருந்தவர்கள்
இருந்த வரிசையில் சென்று அமர்ந்துகொண்டார்

அவர்கள் ஒருவருக்கொருவர்
பேசிக்கொண்டனர்

திரண்ட திவலைகளைத் துடைத்துக்கொண்டேன்
கரகரத்த குரலைத் திருத்தமாக்கி
வரிசைக்கிரமமாக
கோட்டு போட்டு வந்திருந்த அந்த முதல் துயரை
நீங்கள் உள்ளே வாருங்களென அழைத்து
கம்பீரமாகவே சந்திப்பைத் துவக்கினேன்
எந்தத் துயரத்தின் காலையும் கட்டி அழ விரும்பாமல்.

## 2. துயரின் மௌனத்தோடு...

எதையும் உன்னால் சரியாக புரிந்துகொள்ள இயலாது
இன்றைக்கும் சண்டைதான் வரும்



வேண்டாமென்றேன்

எவ்வளவு பட்டும்
எதைச் சொல்லி
எப்போது கேட்டிருக்கிறாய்

இனியும்
நெஞ்சு சுக்குநூறாகும்படி பேச மாட்டேன்
நடக்கமாட்டேனென
சகல தெய்வங்களின் மீதும்
ஆணையிட்டுதான் ஆரம்பித்தாய்

நம்பிக்கையின்மையும் நிறைவின்மையும்
ஆங்காரமும் வன்மமும்
தாறுமாறாய் வெடித்துச் சிதற
உக்கிர நர்தனத்தை ஆடி முடித்தாய்

துயரம்பாவி தத்தளித்து
மூழ்கி மூழ்கி எழுந்து
மூச்சுக்கு ஏங்கிய வேளையில்
வேக வேகமாய் துடுப்பிட்டு
படகில் இழுத்துப்போட்டு வந்தேன்

முன்னைப்போல் அத்தனை எளிதாயில்லை
இந்த நாட்களை கடத்துவது

எல்லாக்கடனையும் தலைமுழுக வைத்து
மீட்டு வந்த நாளில் நிகழ்ந்த அந்த அன்பு
மறுபடி ஏன் நிகழவே இல்லை

என் தோலின் கறுப்பு நிறம் ஏனிப்படி
வாழ்வு முழுவதும் கவிந்து கிடக்கிறது

பரவாயில்லை
குளித்து வந்த பின்
நெஞ்சணைத்துத் தலைதுவட்டி உணர்த்திவிடவே
இன்றும் இந்தக் கதவுக்கருகில் காத்திருக்கிறேன். ●

**ரவி சுப்பிரமணியன்** <ravisubramaniyan@gmail.com>

# கௌரி!

ராம் முரளி
ஓவியம்: ராஜன்

பேருந்து நிலையத்தில் கூட்டம் பெருகியிருந்தது. குறுக்கும் நெடுக்குமாக மனிதர்கள் அலைவுற்றுக் கொண்டிருந்தனர். பேருந்துகள் அங்கொன்றும் இங்கொன்றுமாக நிலையத்தினுள் நுழைவதும் ஆட்களை ஏற்றிக்கொண்டு நகர்வதுமாக இருந்தன. இரு இலைகள் அச்சிடப்பட்டிருந்த அம்மா குடிநீர் நிலையங்களில் ஒருபக்கம் கூட்டம் மிகுந்திருந்தது. ஓட்டுநர்களும் நடத்துனர்களும் தெனவுடன் அவசரங்கள் ஏதுமின்றி சாவகாசமாக உலவித்திரிவதைப்போல நடந்துகொண்டிருந்தார்கள். ஹார்ன் ஓசைகள் பேருந்து நிலையத்தை நிரப்பிக் கொண்டிருந்தது. வெயிலின் சூடு கூடியிருந்த மக்களின் உடலில் ஏறி கடும்சூட்டை கிளப்பியது.

உடல் முழுவதிலும் வியர்வை திரள, தன்னைக் கடந்துச்செல்லும் பேருந்துகள் எதையும் கவனிக்காமல் பதற்றத்துடன் பார்வை வெறித்தபடி நின்றிருந்தான் நாராயணன். அவனது கால்கள் ஓரிடமென்றில்லாமல் அங்குமிங்குமென அலையோடியபடியே இருந்தன. கண்கள் தொலைவில் பேருந்து நிலையத்தின் மைய வாயிலில் நிலைத்திருந்தது. அழுக்கேறியிருந்த தனது சட்டை காலரை இழுத்து, முகத்தில் நீர் புள்ளிகளைப் போல முளைத்திருந்த வியர்வை துளிகளைத் துடைத்துக்கொண்டான். அவனது நிழலும் தரையில் மிதந்தலைந்து கொண்டிருந்தது. தனது செல்பேசியை எடுத்து நேரத்தை ஒருமுறை சரி பார்த்துக்கொண்டான். கௌரி வருவதாக சொல்லியிருந்த நேரத்திற்கு இன்னும் கால்மணி நேரம் மீதமிருந்தது. ஏக்கப் பெருமூச்சைப் படரவிட்டபடி பதற்றம் தணியாமல் நாராயணன் காத்திருக்கத் தொடங்கினான்.

நாராயணனுக்குச் சிறுவயது முதலே நேரத்தை கடைப்பிடிப்பதென்பது இயல்பாகிவிட்டது. பள்ளி துவங்கும் நேரம் ஒன்பதரை என்றால் எட்டு மணிக்கே பள்ளி வளாகத்துள் நுழைந்துவிடுவது அவனது வாடிக்கை. ஆசிரியர்களில் இருந்து பள்ளி கடைநிலை ஊழியர்கள் வரை அவன் நேரத்தைக் கையாளும் சாதூர்யத்தை எண்ணி வியப்பில் ஆழ்ந்திருக்கிறார்கள். பல மாணவர்களுக்கும் நேரத்தை



கடைப்பிடிப்பதாலேயே முன்னுதாரணமாக நிறுத்தப்பட்டவன் நாராயணன். அவனது அப்பா கூட தனது சக பணியாளர்களிடம் அவனது நேரத்தை கடைப்பிடிக்கும் திறனைப் பலமுறை புகழ்ந்து பிரஸ்தாபித்திருக்கிறார்.

துவக்கக் காலங்களில் அவனது அம்மாவுக்கு இவனது நேரத்தின் மீதான பற்றுறுதி எரிச்சலாகவே இருந்தது. இவன் நேரமாக பள்ளி கல்லூரிக்குச் செல்ல, அவளும் விடியற்பொழுதில் எழுந்தாக வேண்டும். காபியும் குளியலுக்கு வெந்நீரும் போட்டுக் கொடுக்க வேண்டும். காலை மற்றும் மதியம் நாராயணன் உட்கொள்ள உணவுகளை தயார் செய்தாகவேண்டும்.

”கொஞ்சம் லேட்டா போனா யாரும் உன் காத கடிச்சிட மாட்டாங்க” என்பது நாராயணனின் அம்மா காலை வேளைகளில் அவ்வப்போது அவனிடம் ஒப்புவிக்கின்ற சொற்றொடர். நாராயணன் காதில் எதுவும் விழாது. குளித்து முடித்ததும் சீருடை அணிந்துகொண்டு அம்மா உணவு கட்டித் தருவதற்காகக் காத்திருப்பான். உணவு கை சேர்ந்ததும், போர் ஒன்றில் தலைமை பங்கேற்பாளனாக பொறுப்பேற்க செல்வதைப்போல அவசரத்துடன் முன்னகர்ந்து திரும்பிக்கூட பாராமல் தன்போக்கில் சென்றுவிடுவான்.

நாராயணன் நேரச் சமாச்சாரத்தில் சாதூர்யம் உடையவனாக இருந்தாலும், கல்வி தேர்வு விழுக்காடுகளில் அத்தனை ஒன்றும் சிறப்பான மதிப்பெண்கள் பெற்றிருக்கவில்லை. பெரும்பாலும், நான்கைந்து பாடங்களில் தோல்வியுற்றிருப்பான் அல்லது பல்வேறு பிரயத்தனங்கள் மேற்கொண்டு மிகச் சரியாக தேர்ச்சிக்குரிய மதிப்பெண்களைப் பெற்று தப்பியிருப்பான்.

”ஒழுக்கத்திற்கும் கல்வி தேர்ச்சி விழுக்காட்டிற்கும் என்ன சம்பந்தம் இருக்கிறது. முதல் நிலை மதிப்பெண்களை வாங்குபவர்கள் கூட இவ்வளவு சீக்கிரமாகப் பள்ளிக்கு வருவதில்லையே” என தமிழாசிரியரான சந்திரமோகன் அவனது தோள் தொட்டு, அவனது நேரத்தைக் கடைப்பிடிக்கும் கடமையை முன்னிறுத்தி தேர்வு முடிவுகளைப்



பின்னுக்குத் தள்ளிவிடுவார்.

சந்திரமோகன் ஐயா பேசிவிட்டால் பிறகு பள்ளியில் எவரும் மறுமொழி பேச மாட்டார்கள். தலைமை ஆசிரியரை விடவும் அப்பள்ளியில் அதிக செல்வாக்குப் பெற்றிருந்தவர் சந்திரமோகன் ஐயா. உள்ளூரில் அவருக்கு இருந்த சாதி சார்ந்த அரசியல் இயக்கங்களுடனான தொடர்புகளே அதற்கான காரணம்.

நாராயணனுக்குச் சந்திரமோகன் ஐயாவின் ஆதரவு எப்போதும் இருந்துகொண்டிருந்தது. அவரது விருப்பத்தின் பேரில், தினசரி காலையில் நிகழும் பள்ளி தொழுகை நேரத்தில் தமிழ் வாழ்த்து பாடல் வாசிக்கும் பொறுப்பு அவன் வசம் ஒப்படைக்கப்பட்டிருந்தது. ஒழுக்கச் சீலன் என பெயரெடுத்திருந்த நாராயணன், சந்திரமோகன் ஐயாவின் ஆசியால் உள்ளம் பூரித்துக் கிடந்தான்.

கடவுள் வாழ்த்துப் பாடுவதும் சந்திரமோகன் ஐயாவுக்குச் சரி நிகராக அவரது இருக்கைக்கு எதிரில் அமர்ந்து மதியப்பொழுதுகளில் உணவருந்துவதும் வகுப்பில் தமிழ் பாடங்களை உரக்க வாசிப்பவனுமாகத் திகழ்ந்துக் கொண்டிருந்த நாராயணனின் மீது பெரும் எண்ணிக்கையிலான மாணவர்களுக்கு ஒருபக்கம் பொறாமையும் எழுந்திருந்தது. மாணவிகள் கூட அவனை கண்டால் முகத்தை திருப்பிக் கொள்வதும் அவனது இருப்பை நிராகரிப்பதுமாக இருப்பார்கள்.

சந்திரமோகன் ஐயாவின் சிநேகம் ஒரே சமயத்தில் அவனுக்கு அனுசரணையாகவும் பெரும் தொந்தரவாகவும் அமைந்துவிட்டிருந்தது. எனினும், நாராயணன் சந்திரமோகன் ஐயாவின் நட்பால் அடைந்த பயன்கள் பல.

நாராயணன் வகுப்பில் பயின்றவள்தான் கௌரி. வயதில் நாராயணனுக்கு இரண்டு ஆண்டுகள் மூத்தவள்; என்றாலும், சிறுவயதில் தாமதமாகப் பள்ளியில் சேர்க்கப்பட்டவள் என்பதால் அவளும் நாராயணனின் வகுப்பில் பயில வேண்டியதாயிற்று. பத்தாம் வகுப்பின் துவக்கத்தில்தான் வேறொரு பள்ளியில் இருந்து மாற்றலாகி அவள் அப்பள்ளியில் சேர்ந்திருந்தாள்.

கௌரியின் மீது அப்பள்ளியில் பயின்ற பல மாணவர்களுக்கும் விரைவிலேயே பெரும் ஈர்ப்பு உருவாகியது. மடிப்பு கலையாமல் நேர்த்தியாக அவள் அணிந்துவரும் உடைகளும் முதுகு தண்டின் மீது விழுந்து புரளும் இரட்டை சடை பின்னலும் ஊதா நிற லேடிபேர்ட் சைக்கிளும் அவள் மீதான பிற மாணவர்களின் ஈர்ப்பிற்கு பிரதான காரணங்களாய் அமைந்தன. அதோடு அவளது சீருடையின் நிறம் மற்றைய பள்ளி மாணவிகளைப்போல் அடர்த்தியாக அல்லாது, மிருதுவாக உலர்ந்த தன்மையில் அமைந்திருக்கும். இவை எளிதாக கௌரியை மற்ற மாணவிகளிடமிருந்து வித்தியாசப்படுத்தி காண்பித்தன. கௌரி வசதியானவளும் கூட.

அவளது தந்தை என்.எல்.சி நிர்வாகத்தில் மேல்நிலை பொறியாளர்களில் ஒருவராக இருந்தவர். கெளரியின் தோற்றத்தில் இயல்பாகவே கூடுதல் பொலிவு பெருகியிருந்தது.

கெளரியின் வீட்டுக்கும் நாராயணனின் வீட்டுக்கும் பெரியளவில் தொலைவு எல்லாம் இல்லை. ஆனாலும், ஏதோவொரு திரை இருவர் வாழும் வெளிகளுக்கு இடையில் விழுந்துதானிருந்தது. அது பொருளாதாரம் ஏற்படுத்திய விரிசலா; தொழில்முறையில் இருந்த வேறுபாட்டின் காரணமாக எழுந்த விரிசலா; குலம், சாதி, சம்பிரதாயத்தால் எழுந்த விரிசலா என்று அறிந்துகொள்ளும் மனப்பக்குவம் அப்போதும் சரி, இப்போதும் சரி நாராயணன் அடைந்திருக்கவில்லை. சிறுவயதிலேயே அறிமுகம் ஆனவள்தான் என்றாலும் பெரியளவிலான நெருக்கம் இருவருக்கும் இடையில் சிறுவயதில் உருவானதில்லை. சிறார் விளையாட்டுகளில் இருவரும் பங்கெடுத்துக்கொண்டாலும் கூட சிநேகம் என்று சொல்லும் நிலையளவில் அது இருந்தது இல்லை. அதனால், பள்ளியிலும் அவளை அவன் மரியாதைப்பூர்வமாகவே அழைத்து வந்தான். துவக்கத்தில் நாராயணனுக்கு கெளரியை மரியாதைப்பூர்வமாக அழைப்பதில் சங்கடங்கள் எதுவும் இருக்கவில்லை. சிறுவயதிலிருந்து பேசக் கிடைத்திருந்த சந்தர்ப்பங்களிலும் அவளை அவன் அப்படித்தான் பார்த்தும் வந்திருக்கிறான்.

ஆனால், காலம் முன்னுக்கு நகர நகர கெளரியின் அழகு பற்றிய ஏனைய பள்ளி மாணவர்களின் பேச்சுகளும் அவளது நெருங்கிவிடவியலாத தனிப்பெரும் அழகு பள்ளி முழுவதையும் ஆள்கிறது என்பது உறைத்ததும் மெல்ல மெல்ல கெளரியின் மீதான அவனது அணுகுமுறையில் மாற்றமேற்படத் துவங்கியது. நாராயணனின் காதுபடவே கெளரியின் அழகை வர்ணித்துக் கொண்டிருந்த சக மாணவர்களால், அவனது மனமும் கலங்கிப் போயிருந்தது.

"என்னடா ஒரு மாதிரியா இருக்கே" என்று அவளாக நெருங்கி வந்து நாராயணனைப் பார்த்து எப்போதாவது வினவுகையில், "இல்லங்க... வீட்ல அப்பா கொஞ்சம் கோபமாக பேசிட்டாரு... அதான். வேறொன்னுமில்ல..." என்று சமாளிப்பாகச் சாதாரணமாக சொல்வானே தவிர, உள்ளுக்குள் கெளரியின் நினைவு அவனுக்குள் நெடு நெடுவென வளர்ந்தபடியே தானிருந்தது. அவளது அருகாமையை அவன் வெகுவாக ரசிக்கத் துவங்கியிருந்தான்.

பள்ளியில் மற்ற மாணவர்களை விடவும் நாராயணனால் எளிதில் கெளரியை நெருங்கிவிட முடியும். இருவருக்கும் இருந்துவந்த அறிமுகமும் அவள் அப்பள்ளியில் புதிதாகச் சேர்ந்தவள் என்பதும் அதற்கான காரணம்.

நாராயணனின் நேரம் தவறாமையின் மீது கெளரிக்கு பிற பிள்ளைகளைப் போல எரிச்சல் இல்லாமல் வியப்பே அதிகமிருந்தது. தான் சிறுவயதில் பார்த்த நாராயணனா இவன்? என அவ்வப்போது அவள் தனக்குள்ளாகவே கேள்வியெழுப்பிக் கொள்வாள். வளரும் காலங்களில் இருவரும் சந்தித்துக்கொள்கின்ற சமயங்கள் அமைந்திருக்கின்றன. ஆனால், கெளரிக்கு நாராயணனின் முகம் பல வருடத்துக்கு முன்னால் தன் சிறுவெளியில் இருந்து மறைந்து காணாமலாகிய ஒன்றாகவே தோன்றியது.

பள்ளியில் அவனுடன் நட்பு அரும்பத் துவங்கியதும், புதர் மறைவில், கால்சட்டை இடுப்புக்கு கீழே இறங்கி நழுவ, ஒருகையால் அதனை இறுக்கமாக பிடித்துக்கொண்டு, மறுகையால் வெட்டிக்கிளிகளை அள்ளியெடுத்து பரவசம் பொங்க துள்ளி வந்த நாராயணனின் முகத்திற்கும்; சிறிதளவு கேளிக்கைக்கும் இடம் கொடுக்காமல் முகத்தை இறுக்கமாக வைத்துக்கொண்டு, தன் வகுப்பில் தமிழ் பாடங்களை உரக்க உச்சரிக்கின்ற, மீசை அரும்ப எத்தனிக்கின்ற இன்றைய நாராயணனுக்கும்; எவ்வளவு வித்தியாசங்கள் என நினைக்கையில் கெளரிக்கு மலைப்பாக இருக்கும். கெளரி இப்போதுதான் அவனைக் கண்கொண்டு பார்க்கத் துவங்கியிருந்தாள்.

காலம் உடலில் எத்தகைய விநோதங்களை நிகழ்த்திக் காட்டுகிறது. மண்ணை உருட்டி மனிதன் பொம்மை செய்து விளையாடுவதைப் போல காலம் மனிதனின் உருவத்தை தனக்கேற்ற வகையில் செய்து கொடுக்கிறது.

நாராயணன் முன்னிலும் அதிக அக்கறையுடன் கெளரியுடன் பழக ஆரம்பித்தான். அவளது மதிய உணவு கூட்டாளியாகவும் மாறியிருந்தான். கெளரி, கல்வியில் முன்னிலையில் இருப்பவள் என்பதால், நாராயணனுக்கு பாடம் புகட்ட விழைவதாக அவனிடத்தில் சொல்ல, நாராயணனுக்கு கெளரியை நெருங்கி பழக கூடுதலான வாய்ப்பாக அது அமைந்துவிட்டிருந்தது.

அனேக வருடங்களுக்கு முன்னால், கெளரியின் வீட்டிற்குத் தெரு பிள்ளைகளுடன் செல்லும் சந்தர்ப்பமும் நாராயணனுக்கு அமைந்திருக்கிறது. அப்போது கெளரியின் வீட்டில் வண்ண மீன் தொட்டி ஒன்றிருந்தது. தங்க மீன்கள் இரண்டும், தனது அசைவை நேர்கோட்டில் நகர்த்திச் செல்லும் புலி வரி மீன்கள் இரண்டும், வெண்ணிற மீசை நீண்டு வளைந்திருக்கும் கோப்ரா மீன் ஒன்றும், பிற மீன்களின் அசுத்தத்தை உண்டு உயிர்ப்பித்திருக்கும் டேங்க் கிளீனர் ஒன்றும், அந்த மீன் தொட்டியில் வளர்ந்துக் கொண்டிருந்தன. பார்த்தவுடன் புலி வரி மீன்களை நாராயணனுக்குப் பிடித்துவிட்டது. நீள தொட்டியில் அதன் அசைவு தனித்தன்மையிலானது. வளைவு சுழிவு எதுவுமில்லாமல், நேராக நீரினுள்ளாகவே தடம் ஒன்றை உருவாக்கி அதன் வழி

பயணிக்கும் சுறுசுறுப்பான மீன் குஞ்சுகள் அவை.

நாராயணன் சிறுவயதுகளில் அந்த மீன்களை பார்ப்பதற்கென்றே கௌரியின் வீட்டிற்குப் பிற சிறுவர்களுடன் ஓரிரு முறை சென்றிருக்கிறான். வெறித்த அவனது கண்கள் நீர் தொட்டியின் மீது நிலை கொண்டிருக்கும். என்னதான் சிறுவர்களின் வருகை கௌரியின் பெற்றோருக்கு விருப்பமானதாக இல்லை என்றாலும், பொடியர்களின் மீன் ஆர்வத்தைக் கலைக்க விருப்பமில்லாமல் அவர்கள் வந்துப் போவதை அனுமதித்தனர்.

இப்போது பத்தாம் வகுப்பு பயில்பவனாக, திரும்பவும் கௌரியின் வீட்டிற்குள் நாராயணன் அடியெடுத்து வைத்தான். கௌரியின் அம்மா இருவருக்கும் தேனீர் போட்டுக் கொடுப்பதோடு, பிஸ்கட்டுகளும் நான்கைந்து வைத்துக் கொடுப்பாள். நாராயணன் கௌரியின் வீட்டிற்கு நுழைந்த தினத்தில், முந்தைய வருடங்களில் அங்கிருந்த மீன் தொட்டியை குறித்து வினவினான். துவக்கத்தில் கௌரிக்கோ அல்லது கௌரியின் அம்மாவுக்கோ அவன் மீன் குஞ்சுகளை பற்றி கேட்பது புரியவில்லை. காலத்தில் அழிந்திருந்தன மீன்கள் பற்றிய அவர்களது நினைவுகள்.

நாராயணனின் வருகைக்கு பிறகே, அவர்களுக்கு தாங்கள் மீன்களை வளர்த்தோம் என்பது நினைவுக்கு தட்டியது. கௌரி அவனது நினைவாற்றால் குறித்து அவனிடம் மிரட்சியுடன் சொல்ல, அவனோ, “அந்த மீன்களாலதான் உங்க வீடு இன்னும் எனக்கு ஞாபகமிருக்கு... அதேப்போல நானும் வளர்க்கனும்னு கூட நினைச்சேன்...” என்று தெரிவித்தான்.

நாராயண் தொடர்ச்சியாக கௌரியின் வீட்டிற்கு சென்று வருவதன் மூலமாக, அடுத்தடுத்த தேர்வுகளில் நல்ல மதிப்பெண்களைப் பெற்று வந்தான். சந்திரமோகன் ஐயாவுக்கும் அவனது படிப்பு குறித்த திடீர் பற்றுதல் மகிழ்ச்சியை அளித்தது. நேர காப்பாளன் என்பதோடு நல்ல மதிப்பெண்களை பெறக்கூடிய நல்ல படிப்பாளி என்றும் நாராயணன் பெயரெடுத்திருந்தான்.

நாராயணின் நினைவுகளில் ஒருபோதும் அழிக்கவியலாத மழை இரவொன்று இக்காலங்களில் வந்துசென்றதே. கடலூர் மாவட்டத்தில் அன்றைய பொழுதில் இருக்கநேர்ந்த எல்லோரின் நினைவுகளில் ஆழப் பதிந்த தினம் அது. அடர் மழை சாலையெங்கும் நீர் நதியாக திரண்டு ஓடிக் கொண்டிருந்தது. பெருத்த மரங்கள் சாலையோரங்களில் வேர் பிடிங்க வீழ்ந்துக் கிடந்தன. உறவற்ற முதிய உயிர்கள் அடிப்பட்டு சரிந்து கிடப்பதைப்போல முந்திரி மரங்கள் மண்ணுக்கு வெளியில் பிடிங்கி எறியப்பட்டன. சாலையோர மண் அரிக்கப்பட்டு வாய்க்கால் நீரோடு கலந்து ஓடின. பாதை எது? பாய்ந்தோடும் நதி நீர் எது? என பிரிக்க முடியாதபடி ஒன்றுடன் மற்றொன்று பிணைந்து உருக்கொண்ட துயரார்ந்த இரவாக அன்றைய நாள் இருந்தது. வீடுகளில் இருந்தோர் பணிக்கோ பள்ளிக்கோ சென்றிருக்கும் தமது வீட்டார் குறித்த கவலையில் இருந்தார்கள். அறுவடையை எதிர்பார்த்திருந்த விவசாயிகள் பெரும் வீழ்ச்சியை சந்திக்கும் மனபாரத்துடன் இருந்தார்கள். வேறு பலரும், என்ன ஏதென்று புரியாமல், உலக அழிவு தினம் வந்துவிட்டதென மனதுக்குள் சொற்களை உருட்டிக் கொண்டு, தத்தமது இருப்பைக் கைக்குள் அணைத்தபடி புரியா விழியுடன், மின்சாரம் அற்ற இருள் பொழுதில் கலங்கி நின்றிருந்தார்கள்.

பள்ளி முடிந்து வீடு திரும்ப வேண்டிய நாராயணன் மழையின் நிமித்தமாக, பள்ளியிலேயே சில மணி நேரம் தங்கியிருக்க முடிவெடுத்திருந்தான். கௌரியும் அப்போது அவனுடன் இருந்தாள். மற்றைய மாணவர்கள் அங்கும் இங்குமென பள்ளியிலேயே நிலைத்துவிட்டிருந்தார்கள். பள்ளி வாயிலின் வடப்புற திசையில் திரும்பி நடந்தால், விரைவாக கௌரியின் வீட்டினை அடைந்துவிட முடியும். எனினும், எதிரில் சாலை தென்படவே இல்லை. எங்கும் இருளே படர்ந்திருந்தது.

நேரமாக நேரமாக எல்லோரையும் ஒருவித பரபரப்பு பற்றிக்கொண்டது. ஏதோ உலகில் தாங்கள் மட்டுமே உயிர்ப்பித்திருப்பதான நினைப்பும் எழ ஆரம்பித்துவிட்டது. கௌரி அப்போதே வீட்டிற்குச் சென்றுவிட வேண்டுமென நினைத்தாள். அவளிடம் குடையும் இருந்தது. அவள் நாராயணனையும் தன்னுடன் வருமாறு அழைத்தாள். தனியாகச் செல்ல அவளுக்குச் சிறிதளவில் பயமாகவும் இருந்தது. முதலில் தயங்கிய நாராயணன், பின்னர் இந்த மழையும் இருளும் இப்போதைக்கு விலகப் போவதில்லை என்றுணர்ந்து அவளுடன் செல்வதென்று முடிவெடுத்துவிட்டான். லேடி பேர்ட் சைக்கிளில் நாராயணன் பின்னால் அமர்ந்திருக்க, முன்னால் அமர்ந்து கௌரி சைக்கிளை ஓட்டினாள். பள்ளியை தாண்டி அவர்களது சைக்கிள் நகர்ந்திருந்தது.

மழை ஓரளவுக் குறைந்திருந்தாலும் சாலையெங்கும் மழை நீர் தேங்கியிருந்தது. முழங்கால் வரை உயர்ந்திருந்த நீர் திரனுள் சைக்கிளை ஓட்டிக் கொண்டு கௌரி செல்ல முயல, சைக்கிளின் சக்கரங்கள் அசைய மறுத்து அவர்களைப் பின்னுக்கு இழுத்தபடியே இருந்தன. ஒருபுறம் குடை காற்றின் விசையில் பின்புறமாக புரண்டு வானத்திற்கு வாய் காட்டியபடி மழை நீரை விழுங்கத் துவங்கிவிட்டது. நாராயணனால் சைக்கிளில் திடமாக அமர்ந்திருக்க முடியவில்லை. நீரின் அழுத்தத்தில் சைக்கிள் தத்தளித்துக் கொண்டிருந்தது. அதற்குள் சாலை ஒரு பெரும் குப்பைத் தொட்டியைப் போல, காகிதங்களாலும் பிளாஸ்டிக் குப்பைகளாலும் நிரம்பிவிட்டது.

கௌரி முன்னுக்கு நகர தீவிரமாக முயற்சிக்கிறாள். ஆனால், சைக்கிள் அசைவதாகவே இல்லை. அது இருந்த இடத்திலே நிலைகொண்டுவிட்டது.

கௌரி சைக்கிள் பெடலை அழுத்தமாக மிதித்து சுழற்ற சட்டென்று சைக்கிள் திரும்பி நீரின் மேல் சரிந்துவிட்டது. கௌரியும் நாராயணனும் நீரினுள் விழுந்துவிட்டார்கள்.

உடை முழுக்க நனைந்து, சைக்கிளை உருட்டிக்கொண்டு நாராயணனும் கௌரியும் வீடடைந்ததைப் பார்த்து, கௌரியின் அம்மா கோபத்தில் வெடித்துவிட்டாள். அவளது உதடுகளில் வசை சொற்கள் கிளம்பி கௌரியை பதம்பார்த்தன. நாராயணனுக்கும் தொடர் வசைகள் விழுந்தன. கோபத்தில் கௌரியின் அம்மா கையில் அகப்பட்ட பொருட்களை எடுத்துஇருவரின் மீதும்வீசியெறிந்தாள். நாராயணனுக்கு அவளது செய்கைகள் எதுவும் அந் நாட்களில் புரியவில்லை. பத்திரமாக வீடு சேர்ந்தது நல்லவிதமான செயல்தானே, அதற்கு ஏன் கௌரியின் அம்மா தன்னையும் கௌரியையும் திட்டுகிறாள் என்பது புரியாமல் முழித்துக் கொண்டிருந்தான்.

மழை லேசாக விட்டிருந்தது என்பதால், கௌரியின் அம்மா நாராயணனை அங்கிருந்து போகும்படி சாடைமாடையாய் தெரிவித்தாள். நாராயணன் மெல்ல எழுந்து, சாலையில் தன் வீட்டை நோக்கி நடக்கத் துவங்கினான். இருளும் மழை நீரும் பிணைந்து சூன்ய வெளியைப்போல அவன் முன்னால் நீண்டிருந்தன. நாராயணனின் கண்களில் கண்ணீர் பெருக்கெடுத்து உதிர்ந்தது. என்னவிருந்தாலும், கௌரியின் அம்மா தன்னை திட்டியதில் துளியும் நியாயமில்லை என்பதாகவே அவனது எண்ணமிருந்தது. இருட்டு பாதையில் தன் திசைவழி நடந்துக்கொண்டிருந்த நாராயணன் அதன் பிறகு, ஒருபோதும் கௌரியின் வீட்டிற்குள் நுழைய அனுமதிக்கப்படவில்லை.

அன்றைய நாளுக்குப் பிறகு பள்ளியிலும் கௌரி அவனிடமிருந்து சற்று விலகி இருக்க முடிவு செய்திருந்தாள். ஒன்றிரண்டு சொற்களுக்குள் மேல் அவர்களது உரையாடல் நீள கதியற்று சிறிது சிறிதாக முற்றிலுமாக பேச்சை இழக்கும் நிலைக்கும் குறுகிய காலத்திற்குள்ளாகவே சென்றுவிட்டது.

அவ்வருட பொதுத் தேர்வில் நாராயணன் நல்ல மதிப்பெண்களை பெற்றிருந்தான். கௌரியுடன் சேர்ந்து பயின்ற பொழுதுகளே தனது பொதுத் தேர்வு முடிவுகளை தீர்மானித்திருக்கிறது என்பதை உணர்ந்திருந்த நாராயணன், சாக்லேட் கட்டிகளை வாங்கியெடுத்துக்கொண்டு கௌரியின் வீட்டினை நோக்கி நடந்துக் கொண்டிருந்தான்.

பள்ளியில் இருவருக்குமிடையில் பேச்சுவார்த்தை முழுதாக உதிர்ந்திருந்தன என்றாலும், நாராயணனின் மனதில் கௌரியின் மீதான நேசிப்பு நாளுக்கு நாள் வளர்ந்தபடியே இருந்தது. பலமுறை பள்ளி தினங்களில் மீண்டும் பேச்சினை தொடர்ந்துவிட வேண்டுமென அவன் முயன்றிருக்கின்றான். ஆனால், கௌரி அவனை தவிர்க்கும் நடவடிக்கையையே தொடர்ந்து மேற்கொண்டிருந்தாள். கௌரியுடன் நெருக்கமாக பழகிய தினங்கள் அவன் மனதுள் நினைவில் மீட்டெடுத்துப் பார்த்து நெகிழ்வுறும் தனக்கு விருப்பமான பழங்காலத்தைப் போலாகிவிட்டது.

பிரிவில் அவள் மீதான அன்பு, பெரும் நேசிப்பாக வளர்ந்து, பின் அதுவே நோயாகவும் அவனுள் தோற்றம் கண்டுவிட்டது.

நாராயணன் இந்த சந்தர்பத்தை விடுவதாக இல்லை. அவளிடம் எப்படியும் தன் மனதில் அலையடித்துக் கொண்டிருக்கும் அனைத்தையும் சொல்லிவிட வேண்டுமென உறுதியாக தீர்மானித்திருந்தான். உடலில் தளர்வு கூடிக்கொண்டே போனது. கண்களில் எரிச்சல் உண்டானது. கையில் பிடித்திருக்கும் இனிப்பு கட்டிகள் எந்த நேரமும் நழுவி விழுந்துவிடும் எனும்படியாக அங்குமிங்கும் ஆடியபடியே இருந்தது. கௌரி குறித்த உணர்வுகள் குத்தீட்டியைப் போல அவனது மனதை கீறியபடியே இருந்தது. மனதை கட்டுப்படுத்த பெரும் சிரமம் பட வேண்டியிருந்தது.

வியர்த்து வழிந்த வியர்வையை விரல்களால் வழித்தபடியே நாராயணன் நடந்து கௌரியின் வீட்டினை அடைந்தான். உள்ளுக்குள் உலக்கையால் குத்துவதைப் போல இருதயம் படபடத்துக் கொண்டிருந்தது. நாராயணன் அவ்வீட்டின் அழைப்பு மணியை அழுத்தினான். சில வினாடிகளுக்கு எந்த அசைவும் இல்லை. மீண்டுமொருமுறை அழுத்தினான். இந்த முறை லேசாக உடலில் உதறல் உண்டாக, அங்கிருந்து நகர்ந்து சில அடி தூரம் நடந்துச் சென்றான். அந்த சாலையின் முடிவில் நின்று இரண்டொரு நொடிகள் தன்னை அமைதிப்படுத்தி கொண்டான்.

நாராயணனுக்கு கௌரியை பார்க்க வேண்டுமென எவ்வளவு தூரம் தோன்றியதோ அதே அளவுக்கு அவளை பார்க்க அவன் விரும்பவில்லை என்பதும் உறைத்தது. கௌரி தன்னை பொருட்படுத்தப்போவதில்லை என்பதை நம்ப துவங்கினான். அவளது வீட்டின் கதவு திறக்கப்படாததே அதற்கான சான்று என மேலும் உறுதியாக நம்பிக்கை கொண்டான். சாலை அவன் முன்னால் நீண்டிருந்தது. ஓரிருவர் அவனை கடந்து சென்றபடி இருந்தனர். சந்தேகத்துடன் அவனை சில கண்கள் நோக்குகின்றன என்பதை உணர்ந்ததும் மீண்டும் திரும்பி கௌரியின் வீட்டை நோக்கி நடந்தான். இன்னமும் கதவு திறக்கப்படாமல் இருந்தது.

நாராயணனுக்கு கோபம் பெருகியது. விருவிருவென பையில் இருந்து ஒரு காகிதத்தை எடுத்தவன், "கௌரி நீ எனது பள்ளியில் இடையில் சேர்ந்தது தற்செயலானதாக இருக்கலாம். அதற்கு முன்னால் உனது முகம் எனது நினைவுகளில் மிகுந்த மரியாதைப்பூர்வமாகவே பதிந்திருக்கிறது. ஆனால், உனது வருகை எல்லாவற்றையும் மாற்றிவிட்டது.



தற்செயலாக அமைந்த இந்த இரண்டாவது சந்திப்பு எனக்கு முற்றிலும் வேறொரு கௌரியையே அறிமுகம் செய்துவைத்தது. ஏதோ ஒரு வகையில் இந்தப் பள்ளியில் நான் சந்தோஷமாகக் கழித்ததற்கு நீயும் ஒரு காரணம், நமக்குள் உண்டாகிய நட்பு எதிர்பாராதது, ஆனால், அது இத்தனை சீக்கிரமாக முடிவுக்கு வர வேண்டிய அவசியமென்ன? உன் பேச்சு, உன் பார்வை, உன் தொடுகை என எல்லாமும் எனக்குப் பிடித்திருந்தன. திரும்பவும் உன்னுடன் பழையபடியே பேச விரும்புகிறேன். இந்த சிறிய கடிதத்தை நீ படித்த பின்பு என்னிடம் பேசவிரும்பினால், வீரன் கோவில் அருகில் நாளை மாலை வரவும். உன்னை ஆவலுடன் எதிர்பார்ப்பேன். மறந்துவிட்டேன். தேர்வு முடிவுகளில் நல்ல மதிப்பெண்களை பெற்றிருக்கிறேன். அதற்கு நன்றி. நாளைய தினத்திற்காய் காத்திருக்கிறேன்" என்று எழுதி விரல்கள் படபடக்க அதனை அவளது வீட்டின் கதவிடுக்கில் சொருகி வைத்துவிட்டு அங்கிருந்து நகர்ந்தான்.

கௌரியிடம் தன் மனக்குறைகளை சேர்பித்துவிட்ட உள்ளூக்கத்துடன் தன் வீட்டை நோக்கி நடந்தான். அவனது மனம் சாந்தமடைந்திருந்தது. அடுத்த தினத்திற்காய் அவன் காத்திருக்க துவங்கினான். இரவு உறக்கம் சரியாக பிடிபடவில்லை. விடியற்பொழுதை எதிர் நோக்கி தரையில் படுத்துகிடந்தான்.

கௌரியிடம் சேர்பிக்கவேண்டுமென குருவிக்கூடு ஒன்றை தன் வீட்டில் பத்திரப்படுத்தி வைத்திருந்தான் நாராயணன். பெற்றோருக்கு தெரியாமல் அய்யனார் ஏரிக்கு சென்றபோது, வழியில் கண்டெடுத்து கொண்டுவந்தது அந்தக் குருவிக்கூடு. அந்தரத்தில் தொங்கியபடியே காற்றிலாடும் அந்த குருவிக்கூட்டினை கொடுத்தால் கௌரி மகிழ்ச்சிகொள்வாள் என நாராயணன் நம்பியிருந்தான். கௌரிக்கு இதெல்லாம் ரொம்பவும் விருப்பமானவை என்பதை அவன் புரிந்து வைத்திருந்தான்.

மறுநாள் வீரன் கோவிலில் நாராயணன் காத்துக்கிடந்தது தான் மிச்சம். கௌரியின் வருகை அன்றைக்கு ஏற்படவில்லை. தனியனாகக் கோவிலை ஒட்டிய மண் சாலையில் அழுகையுடன் நடந்துச்சென்றான். கையில் வைத்திருந்த கனமற்ற குருவிக்கூடு அவனது தோல்வியினை உறுதிப்படுத்தும் சாட்சியமாக நிலைக்கொண்டிருந்தது. அதனை பார்க்கவே அவனுக்கு அருவருப்பாக இருந்தது. குருவிக்கூட்டினை வன்மத்துடன் நசுக்கி தரையில் ஓரமாக வீசிவிட்டு தன் வீடு நோக்கி நடந்துச் சென்றான். கௌரியின் நினைவுகளும் தனது கையாளாகத்தனமும் அவனது மனதுள் அரற்றியபடியே இருந்தன. இது அவனது முதலாவது காதல் தோல்வியாகவும் இருக்கலாம்.

திடீரென மழை இரவில் இருவரும் ஒன்றாக சைக்கிளில் பயணித்த நினைவுகளை அசைபோட துவங்கினான். அந்த நகரமே ஒரு பெரிய மீன் தொட்டியாக அவனது கற்பனையில் விரிந்தன. அதனுள் நீந்தும் இரண்டு சிறிய மீன்களாக தங்கள் இருவரையும் அவன் கற்பிதம் செய்துக்கொண்டான். அல்லது அது ஒரு கனவுநிலை மயக்கமாகவும் இருக்கலாம். அந்த மீன் தொட்டியின் கண்ணாடி சில்லுகள் உடைந்துநொறுங்குகின்றன. சிதறிகிடக்கும் அந்தக் கண்ணாடி சில்லுகளில் கௌரியின் அம்மா உச்சரித்த வசைச் சொற்கள் பதிந்து கிடக்கின்றன.

அதன்பிறகான நாட்களில் நாராயணனின் குடும்பம் நெய்வேலியில் இருந்து நெய்வேலியின் நகர்பகுதிக்கு இடம்பெயர்ந்தது. அவனது அப்பாவுக்கு நிரந்தர ஊழியராகப் பணி நியமனம்

செய்யப்பட்டதும் புதுக் குடியிருப்பிற்கு நகரும் சாத்தியங்கள் இருந்ததாலும் அவர்கள் அங்கிருந்து நகர வேண்டியதாயிற்று. அங்கு அருகிலிருந்த மற்றொரு பள்ளியில் பதினோரம் வகுப்பில் நாராயணன் சேர்ந்து படிப்பினை தொடர்ந்தான். அவனது நேரத்தை கடைப்பிடிக்கும் சாதூர்யம் இங்குத் தொடரந்தபடியிருந்தது. புதிய நண்பர்கள், புதுவிதமான அனுபவங்கள் என அவனது வாழ்க்கை வேறொரு திசையில் நகர நகர, கௌரி குறித்தான அவனது நினைவுகள் சிறிதுசிறிதாக அழிந்தபடியே இருந்தன. என்றாவதொரு நாளில் அடர்ந்த மழை இருள் அவனது பாதையில் எதிர்கொள்ள நேரிட்டால் மட்டுமே அந்த இரண்டு சிறிய மீன்களின் நினைவுகள் அவனுக்கு வந்துவிடும். பெரும் துயருடன் அந்த நினைவை அவன் கடக்க முயலுவான்.

கௌரியை திரும்பவும் அவன் இரண்டு வாரங்களுக்கு முன்பு சென்னையில் வைத்துப் பார்த்தபோது அவனுக்கு துளியும் அவளை அடையாளம் கண்டுக்கொள்ள முடியவில்லை. கோயம்பேடு பேருந்து நிலைத்தின் எதிரில் இருந்த பூங்காவில் தனது நண்பன் ஒருவனை சந்திக்க காத்திருந்தபோது, வெகு இயல்பாக அந்த சந்திப்பு நிகழ்ந்தது. கிட்டதட்ட பத்து ஆண்டுகளுக்கு பிறகு கௌரியின் குரலை அவன் கேட்டான். பூங்காவுக்கு தனது ஆண் நண்பன் ஒருவனுடன் வந்திருந்த அவள், நாராயணனை கடந்துச் செல்கையில் அவளுக்கு எதுவோ தட்டுப்பட்டிருக்கிறது. சட்டென நின்று அவன் முகத்தை உற்றுப் பார்த்தவள், “ஏய்... நீ நாராயணன் தான...?” என்றாள்.

சென்னை நகரத்தில் அவன் தஞ்சம் புகுந்தே வெகு சொற்ப தினங்கள்தான் ஆகிறது எனும் நிலையில், இப்படி அவனது பெயரை உரக்க ஒரு பெண் அழைக்கிறாள் என்றதும் அவனுக்கு ஒரு நொடி பதட்டமாகிவிட்டது. தனது நிலையை சமன் செய்துக்கொண்டு, எழுந்து, “ஆமாங்க நான் நாராயணன்தான். நீங்க...?” என்றான்.

“அன்பிலிவபல், எவ்ளோ வருஷம் கழிச்சு இப்படி உன்ன பாப்பேன்னு நினைக்கவே இல்லை... என்ன தெரியல... நான்தான் கௌரி”

நாராயணனுக்கு அந்தப் பெயரை கேள்வியுற்ற தருணத்தில் உள்ளுக்குள் ஒருதிடுக்கிடல் உண்டானது. எத்தனை காலமாய் மனதின் அடியாழத்தில் புதையுண்டிருந்த பெயர் அது. கௌரி.... வசீகரமும் மென்மையும் நறுமணமும் நிரம்பியிருக்கும் அவனது பள்ளிக்கால நினைவுகளின் பெயர்.

நாராயணன் தனக்கெதிரில் ஆண் ஒருவனின் கைவிரலை பற்றியபடி நின்றிருக்கும் அவளை உற்று நோக்கினான். கண்களில் ஒரு கண்ணாடி. உதட்டு சாயம் சிவப்பு நிறத்தில் மினுங்கிக் கொண்டிருந்தது. முழுக்கைசட்டை,ஜீன்ஸ்பேண்ட் என ஆளே உருமாறி யிருந்தாள். நாராயணனுக்கு என்ன சொல்வதென்று தெரியவில்லை. முதலில் அவளை நம்பவே அவனுக்கு தயக்கம் இருந்தது.

கௌரி அவனது கன்னத்தை பிடித்து கிள்ளினாள். ”நீ இன்னும் வளரவே இல்லன்னு நினைக்கிறேன். எப்படி தேம்ப தேம்ப முழிக்கிறப் பாரு... இங்க யாருக்காக வெயிட் பண்றே...?”

உதடுகளில் சொற்கள் குறுக்கும் நெடுக்குமாக அலைவுற, “என் பிரண்டுக்காக...” என்று சொல்லி நிறுத்தினான். அதற்குள் அவனது மனது படபடக்க துவங்கியிருந்தது. அவளுக்கு எதிரில் நிற்கவும் அவளுடன் உரைடாலில் பங்குக்கொள்ளவும் அவனுக்கு சிரமமாக இருந்தது.

“இன்னும் அந்த டைம் கீப் அப் பண்ற வேலைய விடவே இல்லை. அது சரி... பிரெண்டுன்னா யாரு கேர்ள் பிரண்டா...? பாய் பிரண்டா..?” என்று கண்களை குறுக்கி சிரித்தபடியே கேட்க, இந்த கேள்வி மேலும் நாராயணனை துணுக்குற செய்தது.

“இல்ல இல்ல கூட வேலை செய்யுறவன்...” என்று அவஸ்தையுடன் சொன்னான்.

“சரி சரி... நீ கம்பர்டபிளா இல்லன்னு நினைக்கிறேன்...ஐ வில் டாக் வித் யூ இன் மொபைல்... உன் நம்பர் குடு...”

கௌரியிடம் தனது செல்பேசியின் நம்பரை கொடுத்துவிட்டு அறை திரும்பியதும் உள்ளுக்குள் அவனுக்கு மகிழ்ச்சி அரும்பியது. நினைவின் தடத்தில் பூங்கொத்துக்களுடன் கௌரி அவனது வருகைக்காக காத்திருப்பதான காட்சிகள் அவனது எண்ணத்தில் அரங்கேறிய வண்ணம் இருந்தது. கௌரியின் கண்களில் பெருக்கெடுத்து ததும்பும் காதல் துளிகளில் எல்லாம் நாராயணனின் முகமே நிலைத்திருக்கிறது என்பதாக கற்பனை செய்து கொண்டிருந்தான். அகண்ட அந்த பூங்காவில், மனிதர்கள் குவியல்குவியலாக அலைவுற்றுக் கொண்டிருந்த அந்த மாலையில், தன் முகத்தை பத்தாண்டு கால இடைவெளி கடந்தும் நினைவில் வைத்திருக்கும் உணர்வை என்னவென்று விவரிப்பது? நாராயணன் திரும்ப திரும்ப கௌரியையே அன்றைய இரவில் நினைத்துக்கொண்டிருந்தான்.

எவ்வளவு அழகாக சிகை அலங்காரம் செய்திருக்கிறாள்? உடை உடலுக்கு மிகபொருத்தமாக இருக்கிறதே? உதட்டு சாயமும் கைக் கடிகாரமும் ஜீன்ஸும்.... அப்பப்பா...! கௌரி கௌரி கௌரி என்பதாக பத்தாண்டுகளில் தான் தப்பவிட்ட தருணங்களுக்கெல்லாம் உயிர்பித்து, தன்னுடன் அவளையும் அந்த நினைவுகளில் அவன் பொருத்திக்கொண்டான்.

கௌரியிடமிருந்து இரண்டு தினங்களுக்கு முன்பு “சந்திக்கலாமா?” என குறுஞ்செய்தி வந்ததும், அவனது மகிழ்ச்சி மேலும் இரட்டிப்பானது.

"எப்போ வேணும்னாலும் சந்திக்கலாம், கௌரி" என்று பதில் செய்தி அனுப்பினான். தனக்கு இரு தினங்களுக்கு வேலை இருப்பதாகவும் ஞாயிறு மதியத்தில் கோயம்பேடு பேருந்து நிலையம் வருமாறும் அவள் அவனிடம் கேட்டிருந்தாள்.

நாராயணனுக்கு ஞாயிறு மதியத்தை அப்பொழுதே கற்பனையில் நிகழ்த்திப் பார்க்கும் ஆசை உண்டானது. அவளிடம் என்ன பேச வேண்டும், எப்படி பேச வேண்டுமென அவன் மீண்டும் மீண்டும் ஒத்திகை பார்த்துக்கொண்டான்.

பேருந்து நிலையத்தில் நல்ல கூட்டம். கௌளரியின் வருகைக்காக நாராயணன் காத்திருந்தான். உடலில் ஊறி சட்டையை ஈரமாக்கியிருந்த வியர்வையின் புழுக்கம் அவனுக்கு நசநசவென இருந்தது. வெயில் கோரமாய் எழுந்தருளியிருந்தது. காற்றில் வெப்பத்தின் சூடு கலந்து தீ ஜூவாலைகளால் படர்ந்தபடி இருந்தது. கௌரி சொல்லியிருந்த நேரத்திற்கு முன்னதாகவே வந்திருந்ததால், நாராயணன் இதனையெல்லாம் தாங்கிக்கொள்ள வேண்டியிருந்தது.

நிமிடங்கள் சில கரைந்ததும் கௌரியிடமிருந்து அவனுக்கு செல்பேசியில் அழைப்பு வந்தது. கறுத்து காய்ந்திருந்த கைகளில் அதனை ஏந்தி காதோடு அழுத்தி பேசியதில், அவளும் கோயம்பேடு வந்துவிட்டாள் எனவும், நெய்வேலி நகரத்திற்கு செல்லும் பேருந்துகள் நிற்கும் இடத்தில் இருப்பதாகவும் தெரிவித்தாள்.

நாராயணன் விறுவிறுவென அவளை நோக்கி நடக்கத்துவங்கினான். வழியில் எதிர்பட்ட எந்தவொரு முகமும் அவனது மனதில் பதியவில்லை. தனக்கு விருப்பமான புலிவரி மீன்களின் அசைவைப்போலவே, தனக்கான தடம் ஒன்றை உருவாக்கி அதனை மிதித்து கடந்து கொண்டிருந்தான்.

தொலைவில் கௌரி இவனைப் பார்த்து கையசைத்தபடி நின்றிருந்தாள். இன்னும் பத்தடிகள்தான் கௌரிக்கும் அவனுக்கும். இடப்புறத்தில் புத்தக கடைகள் வரிசையாக இருந்தன. சிறுவன் ஒருவன் பிஸ்கட்டுகளை கொரித்தபடி அமர்ந்திருந்தான். அவ்விடத்தில் கூட்டம் மிகுந்திருந்தது. நடத்துனர்கள், "பண்ருட்டி, நெய்வேலி, சிதம்பரம்" என மீண்டும் மீண்டும் உரக்க கத்தியபடி இருந்தனர். நாராயணனுக்கு எதுவொன்றும் முக்கியமானதில்லை. தனது பதின் வயதில் சுயமாக திரண்டெழுந்து, தனக்குள் அழியாச் சுடராக பிரகாசித்து ஒளி பரப்பியபடியிருந்த கௌரியின் முகம் சற்றே தொலைவில் மினுங்கிக் கொண்டிருக்கிறது. அவனது தகிக்கின்ற மனநிலையை அந்தப் பொன்னொளியை கொண்டு மட்டுமே சாந்தப்படுத்த முடியும். சைக்கிளில் மழை வெள்ளத்தில் பயணித்த தினம் கௌரிக்கு பின்னால் நிழல்கோடுகளாக இறங்கிக் கொண்டிருந்தன. தொலைவில் கௌரியின் அம்மா வசை சொற்களை பொழிந்து கொண்டிருக்கிறாள்.

நித்திய சௌந்தர்யம், பரிபூரணம், நிலைத்த நெடுங்காதல் அந்த வசைகளையும் தங்களுக்கு இடையில் உதிர்ந்து எரிந்த காலத்தையும் நவீனத்துவத்தின் ரேகைகள் ஏறியிருக்கும் அவளது உடலையும் புறந்தள்ளி நீர் வெளியில் ஒற்றை தடம் உருக்கொணரும் மீன்களாக உருமாறும் சாத்தியங்களை ஏந்தி முன்னுக்கு நாராயணனை நகர்த்திக் கொண்டிருந்தன. எரிதழல் கனன்று பிராகாசித்து ஒளிந்தன. நாராயணன் கௌரியை நெருங்கிவிட்டான்.

"ஏண்டா ரொம்ப நேரத்துக்கு முன்னாடியே வந்துட்டியா..? நான் ஒன்ன எக்ஸாட்டா இந்த டைம்முக்கு வந்தாப்போதும் சொன்னனல..." உரிமையுடன் கௌரி விரல்களை முன் நீட்டி கேட்க, நாராயணன் பதில் சொல்ல இயலாமல் அவளையே பார்த்தபடி நின்றிருந்தான்.

"சரி அத விடு. நான் இப்போ நெய்வேலிக்குதான் போறேன். என்னோட பையனுக்கு ரெண்டாவது பிறந்த நாள். அத கொண்டாடத்தான் போயிட்டு இருக்கேன்."

கௌரியின் வார்த்தைகள் நாராயணனுக்கு புரியவில்லை. குழப்பத்துடன், "எந்த பையன்...?" என்று கேட்டதுதான் தாமதம், விருட்டென "எந்த பையனுக்கா... என்னோட பையனுக்குதான். பின்ன என்ன ஊருல உள்ளவங்க பசங்களுக்காக கொண்டாட்டம் போடுவாங்க..?"

"உனக்கு கல்யாணம் ஆகிருச்சா கௌரி..?" அதிர்ச்சி அவனது உடல் உறைந்த நிலையினை எட்டிக் கொண்டிருக்க, மேலும் அவளிடம் அதனை உறுதி செய்துகொள்ளும் தீர்மானத்தில் இருந்தான்.

"ஐய்யே... கல்யாணம் ஆகாமலா குழந்தை பெத்துப்பாங்க... எனக்கு மூனு வருஷம் முன்னாடியே காலேஜ் முடிச்ச கையோட கல்யாணம் பண்ணிட்டாங்க... ஆனா எங்களுக்குள்ள டேர்ம்ஸ் ஒத்து வரல... சோ லாஸ்ட் இயர் ரெண்டு பேரும் மியூட்சுவலா சைன் பண்ணிட்டு அவங்க அவங்க பாதையை தேர்ந்தெடுத்துட்டோம்."

நாராயணனுக்கு அதிர்ச்சி மேல் அதிர்ச்சியாக இருந்தது. அவளது தலையசைப்பு, இடுங்கிய மூக்கு, அகண்ட நெற்றி, தலைசேகம், கண்களில் துளிர்க்கும் கருணை எதுவும் இத்தனை வருடங்களில் மாற்றம் கொண்டிருக்கவில்லை எனும் நிலையில், அவளில் இருந்து ஒரு உயிர் கிளைத்திருக்கிறது என்பதே அவனுக்கு வியப்பாக இருந்தது.

"நீ ஸ்கூல் மாறி போயிட்டதுக்கு அப்புறம், நான் உன்ன பாக்கவே இல்ல. அதுக்கப்புறம் சில தடவ உன்னோட நினைவு எனக்கு வந்திருக்கு. அதுவும் மழை நாளான போதும், உன் முகம்தான் எனக்கு

நினைவுக்கு வரும். உடம்பு முழுக்க நனைஞ்சு ரெண்டு பேரும் வீட்டுக்கு போய் அம்மாகிட்ட திட்டு வாங்குனது நினைவுக்கு இருக்கா..?"

நாராயணன் உயிரற்ற தன்மையில் தலையசைத்தான்.

"அன்னைக்கு நைட் எங்க அம்மா உன் கூட பேசக்கூடாதுன்னு சொல்லிட்டாங்க. இப்போ நினச்சா ரொம்ப சிரிப்பா இருக்கு. அதக்கேட்டு நானும் உன்ன அவாய்ட் பண்ண ஆரம்பிச்சிட்டேன். அது எவ்ளோ முட்டாள்தனமானதுன்னு இப்போ புரியுது. உன்ன எதனா ஹேர்ட் பண்ணி இருந்தன்னா என்ன மன்னிச்சிடு.."

"அய்யோ அதெல்லாம் வேணாங்க. எனக்கு உங்கள ரொம்ப பிடிக்கும். உங்களாலதான் எனக்கு படிப்பு மண்டையில ஏறுச்சு. அதான் நீங்க சட்டுன்னு என்கிட்ட பேசுறத நிறுத்திட்டதும் என்னால அத தாங்க முடியல.."

"ஐ நோ தட். தவிர நீ என்கிட்ட ரொம்ப உரிமையா பழகிட்டு இருந்த. உன்னோட பெஸ்ட் பிரெண்ட் மாதிரி. எனக்கு உன்னோட பாசம் அந்த வயசுல ரொம்ப பிடிச்சிருந்துச்சு. சரி அதெல்லாம் விடு. இப்போ என்ன பண்ற..? ஜாப் போறியா...?"

நாராயணனுக்கு உள்ளுக்குள் பெருத்த ஏமாற்றமாக இருந்தது. கனம் குறைந்து எடையற்று நின்றிருப்பதைப்போலதன்னை உணர்ந்தான். அவனது மனம் காற்றில் மிதந்துக் கொண்டிருந்தது. நாராயணன் கண்கள் கலங்க துவங்கின. அதனை வெளிக்காட்டிக் கொள்ளாமல், "வேலைக்கு போறேங்க... சிவில் என்ஜினியரிங். பூந்தமல்லில ஒரு சைட் ஓடிக்கிட்டு இருக்கு. நீங்க என்ன பண்றீங்க..? அன்னைக்கு ஒரு பையன் உங்கக்கூட வந்தானே அது..?"

"ஒஹ்... பத்ரிய கேக்குறீயா..? அவன் இப்போதான் கொஞ்ச நாளா பழக்கம். நான் லா பிராக்டீஸ் பண்ணிட்டு இருக்கன். என்னோட பிரெண்ட் ஒருத்தியோட அண்ணன் அவன். பர்ஸ்ட் மேரேஜ் பெயிலியரா ஆனதுக்கு அப்புறம், என்மேல முழுமையா அன்பு செலுத்தக்கூடிய ஒருத்தனா அவன்தான் இருந்துட்டு இருக்கான். அன்னைக்கு உங்கூட சரியா பேசாததுக்கு கூட அவன் என்மேல வச்சிருக்குற பொசஸிவ் நேச்சர்தான் காரணம். சீக்கிரம் எங்களுக்குள்ள செகண்ட் மேரேஜ் நடந்தாலும் நடக்கும். ஐ வில் இன்வைட் யூ. சரியா...?"

நாராயணன் பேச்சற்று ஊமையாக நின்றிருந்தான். அவனது தலை மட்டும் அவளது வாதங்களை ஏற்றுக்கொள்வதைப்போல தன்போக்கில் அசைந்துக் கொண்டிருந்தது.

"எவ்ளோ சந்தோஷம் தெரியுமா ? உன்ன பாத்தது. உன்ன பாத்ததுக்கு அப்புறம் நம்ம ஸ்கூல் டேய்ஸ் நினைவுகள் எல்லாம் எனக்கு தொடர்ந்து வந்துட்டே இருக்கு. அந்த மரத்தடி கிளாஸஸ். சந்திர மோகன் ஐயா, பேபி டீச்சர், என்னோட பிரெண்ட்ஸ், அப்புறம் அந்த மழை எல்லாமே ஒவ்வொன்ன நினைவுக்கு வருது. ரொம்ப லைட்டா உணருறேன். சரி என்னோட வாட்ஸ் அப்ல டச்ல இரு. நாம திரும்ப இன்னொரு நாள் சந்திக்கலாம்... சரியா" என்று கேட்டுவிட்டு, அவனுக்கு கையசைத்து நெய்வேலி செல்லும் பேருந்து ஒன்றில் ஏறியமர்ந்துக் கொண்டாள்.

நாராயணன் செய்வதறியாமல் அவளையே அவ்விடத்தில் நின்று பார்த்துக் கொண்டிருந்தான். அவனது உடல் முன்னிலும் அதிகமாக நடுங்கியபடி இருந்தது. பால்யகால நினைவுகள் அவளுள் எழுந்தருள துவங்கியிருப்பதாக சொல்லிவிட்டு அவள் செல்ல, இவனுக்கு இனி நினைவுகள் என்பதே பெரும் சுமையாக இருக்குமே என எண்ணம் தோன்றலாயிற்று. கௌரியின் முதல் திருமணம், குழந்தை, புதிய ஆண் சிநேகம், அதுவும் அவளை பெரும் நேசிப்புடன் பாதுகாக்கும் ஒருவன் என்பதெல்லாம் நாராயணனுக்கு மீண்டும் மீண்டும் சொற்களால் செவிகளில் விழுந்தபடியே இருந்தது.

அந்த கடித்தத்தை கௌரி படித்திருப்பாளா ? என அவளிடம் கேட்க வேண்டும் போலவும் இருந்தது. ஆனால், அவள் அதனை அலட்சியப்போக்குடன் கேளிக்கை கடிதமென தன்னிடம் உரைத்துவிட்டால் அதனை எப்படி ஏற்றுக்கொள்வதென அவனுக்கு அவஸ்தையாக இருந்தது.

கண நேரத்திற்கு முன்பு அவன் சந்தித்தது கௌரியே அல்ல எனும் பிரேமையை திடீரென வளர்த்துக்கொண்டான். இவள் காலத்தால் தனக்கு பிந்தி பிறந்தவள். கௌரியின் மாற்று. நகல் அல்லது நிழல். இவள் ஒருபோதும் தனது கௌரியாக இருக்க முடியாதென நிச்சயம் கொண்டான். கோயம்பேடு பூங்காவில் அவன் சந்தித்தது கௌரியை அல்ல. கௌரிக்கு இதுவெல்லாம் நேராது. எந்தவொரு ஆணும் உள்ளங்கையில் வைத்து தாங்க விரும்பும் பரிசுத்தமான உயிர் அவள்.

நாராயணன் பேருந்து நிலையத்திலிருந்து திரும்பிக் கொண்டிருந்தான். எத்தகைய எதிர்ப்பார்ப்புடன் அந்த பேருந்து நிலையத்தில் நுழைந்தானோ அதற்கு எதிர்மறையான எண்ண அலைகளுடன் அங்கிருந்து விலகியபடியிருந்தான். அடர்மழை இரவில் முன்னொரு காலத்தில் தொலைந்துப் போயிருந்த கௌரிக்காக அவன் இன்னமும் காத்திருக்க வேண்டி இருந்தது. அவனது கடிதத்தை அவள் படித்தாலா என்பதை கேட்பதற்காகவாவது அவன் கௌரிக்காக காத்திருக்க முடிவு செய்திருந்தான். அந்த கடிதத்தின் சொற்களில் உறைந்திருக்கும் தனது முதல் காதலியை காலம் இன்னமும் தனக்கு அடையாளங்காட்டவில்லை என்பதாக நினைத்தபடியே மெல்ல நடந்துக் கொண்டிருந்தான். கருத்த சாலை விரிப்பில் அவனது உருவம் மெல்ல அழிந்துக்கொண்டிருந்தது. ●

ராம் முரளி <raammurali@gmail.com>

# அருள்ஜோதி முரளிதரன் கவிதைகள்

**ஓவியம்: எம்மா ஏமஸ்**



## 1. காபி என்றும் பெயரிட்டு அழைக்கலாம்!

நீங்கள் அந்த பானத்திற்கு காபி என்றும்
பெயரிட்டு அழைக்கலாம்
டிம் ஹார்டன்சின்
காப்பிச்சினோவாகவோ
ஸ்டார்பக்ஸின்
பம்ப்கின் ஸ்பைஸ் லாட்டேவாகவோ
அன்னபூர்ணாவின்
நுரைததும்பும்
ஃபில்டர் காபியாகவோ
அது இருக்க வேண்டியதில்லை
கொதிநீரில் கரும்பொடி கலந்த
கருந்திரவம் கூட போதுமானது தான்.

அவன் அரிதாரம் உறித்து
பிம்பம் நொறுக்கி
தீமூட்டிச் சென்றதொரு நாளில்
சித்தம் கலங்காது

திரட்டியதொரு திரவத்தின்
கசப்பிற்கு
தன்னை
ஒப்புக்கொடுத்தவளிடம்,

சயனைடு குப்பியை
குளம்பி என்று
பெயரிட்டழைத்தாலும்
அதைப் பருகுவதில்
அவளுக்கொன்றும்
ஆட்சேபணையில்லை

காலத்தின் கடைசிச் சொட்டு
பானத்தை பருகும் அவளிடம்
இமைக்குத்தி நிலைக்கும் வரைஸ்
'உன்னை மனதார நேசிக்கிறேன்'
என்ற கபடத்தின் வார்த்தைகளை
மட்டும் சற்று விரையாதிருங்கள்!



## 2. நினைவின் வாசம்!

குறுகலான அந்த லிப்ட்டில்
45 டிகிரி பாகையில்
நின்றிருந்தது அந்த
நெடிய உருவம்

உறைந்த காலத்தின்
நினைவடுக்குகளைக்
கிளறி
நுரையீரல்களை
வியாபித்தது,
அந்தப் பாகையில்
இருந்து
கிளம்பிய வாசம்..

அதே வாசம் தான்
மூளைச்செல்களை
கொஞ்சம் கொஞ்சமாய்த் தின்று
சிதிலமடையச் செய்த வாசம்!

இதே தான், இதே போலத்தான்
குறுகலானதொரு அறை!
வெப்பம் புழுங்கிய நாளொன்றின்
குளிரூட்டப்பட்ட
அந்த குறுகிய அறையை அவன்
தன் நறுமணத்தால் நிறைத்திருந்தான்.

அதே வசீகரம் நிறைந்த
சாத்தானின்
கண்கள்!
ஆலகாலம் தடவிய நாவில் கொஞ்சம்
பிரியத்தையும் தடவி
ஆன்ம வேட்கையில் உயிரைத் துளைத்தவன்
மேலிருந்த அதே வாசம்!

குறுகலான இடங்களில்
உருவாகும்
'க்ளாஸ்ட்ரோபோபியா'வில்
அன்று அவன் முன் மயங்கி
சரிந்ததைப் போல்
இன்றும் விழாமல் இருக்க
கேவலடக்கி நின்றிருந்தேன்!

அவனா?
திரும்பவும் பார்க்கத் தெம்பின்றி
தவித்திருக்கையில்
முதுகில் எதோ படர்ந்தது

பதற்றத்தில் உதறிவிட்டேன்
குறுகிய லிப்டின்
வாய் அகலமாய்த்
திறக்க
விழுந்து ஓடின ஆயிரம்
விரியன் குட்டிகள்! மூர்ச்சையானேன்!

## 2. உன் முத்தத்திற்கு ஊதா நிறம்!

இதே போன்றதொரு
இலையுதிர் காலத்தில் தான்
தவளைகள் கூச்சலிடும்
ஒரு மழை இரவில்
என் நுதலெங்கும்
முத்தங்களை
நீ நடவு செய்தாய்

நுதல் முத்தங்கள்
ஒவ்வொவொன்றாய்
ஒற்றி எடுத்து
வீட்டின் கொல்லையில்
புங்கை மரத்தடியில்
புதைத்து வைத்திருந்தேன்

காலத்தை கொஞ்சம்



சிறையிலெடுத்து
நம் அந்தரங்கத்தைச்
சுமந்தலைகிறது
கொல்லைப்புறத்துப் புங்கை

தனித்திருக்கும் இரவுகளை
சலனமின்றி கடக்க
நடுநிசியில் முளைக்கிறது
தினமொரு புங்கை மர முத்தம்

முத்தப் பூக்கள் உன் சிரிப்பின்
சாயலில் இருப்பதாய்
நாணுகிறேன்...
கொத்துப் பூக்களை
உதிர்த்துத் தளும்புகிறது
புங்கை!

அட இன்று தான் அறிந்தேன்
உன் முத்தத்திற்கு
ஊதா நிறம்!
மூப்படைந்த புங்கை
மீதமிருந்த
கடைசி முத்தத்தை இன்றோடு
முடித்துக்கொள்வதாய் ஏற்பாடு

நாளை நீ வந்துவிடுவாய் தானே! ●

அருள்ஜோதி முரளிதரன் <aruljoewin1@gmail.com>

# காலத்தின் முன் தொலைந்து போகாத படைப்பாளிகள்

**இளங்கோ**

நான் திரைப்படம் குறித்து எழுதிய முதல் விமர்சனம் 'Finding Forrester'. இந்தத் திரைப்படத்தைப் படித்துக் கொண்டிருந்தபோது பார்த்தேன். அதன் பாதிப்பில் ஒரு விமர்சனம் எழுதி, அது பத்திரிகையொன்றில் வெளிவந்தது.

ஒரு கறுப்பின பதின்மனுக்கும் ஒரு எழுத்தாளருக்கும் இடையில் மலரும் நட்பைப் பற்றிய படமது. எழுத்தாளர் புலிட்ஸர் விருது பெற்ற படைப்பாளி. என்றாலும் எல்லா வெளியுலகத் தொடர்புகளையும் மூடி தன் வீட்டுக்குள் வசிப்பவர். தன்னை திறந்து காட்டாத எழுத்தாளர் அந்த கறுப்பின பதின்மனுக்கு ஆங்கிலக் கட்டுரைகளைத் திருத்திக் கொடுக்கும் நண்பராகின்றார்.

இதில் சீன் கானரி (Sean Connery) எழுத்தாளராக நடித்திருப்பார். இது ஒரு கற்பனைப் பாத்திரம் என்றாலும், ஜே.டி. சாலிஞ்சர் (J.D. Salinger) பாதிப்பு இப்படத்தில் தனக்குள் இருந்ததென்று சீன் கானரி பின்னர் சொல்லியிருக்கின்றார்.

ஆங்கிலத்தில் சாலிஞ்சர், ஹார்ப்பர் லீ (HarperLee) போன்றவர்கள் தமது முதலாவது நாவல்களின் பெரும் வெற்றிகளுக்குப் பின் எதையும் எழுதாமல் (அல்லது எழுதினாலும் நூலாக வெளியிடாமல்) இருந்தவர்கள். ஆனால், அவர்களின் நாவல்கள் பெரும் பாதிப்பை வாசகர்களிடையே ஏற்படுத்தி அடுத்து என்ன நாவல்கள் எழுதுவார்களெனக் காத்திருக்க வைத்தவை. சாலிஞ்சரின் 'The Catcher in the Rye' பதின்மன் ஒருவனின் வாழ்க்கையைச் சொன்னாலும், பல நாடுகளில் அது தடைசெய்யப்பட்டது. அமெரிக்காவிலும் பல பாடசாலைகளில் கத்தோலிக்க மதத்தை நிந்தனை செய்வதாக படிப்பது தடை செய்யப்பட்டது. 1951இல் வெளியிடப்பட்ட இந்த நாவல் மில்லியன கணக்கில் விற்கப்பட்டிருக்கின்றது.



இத்தனை ஆண்டுகள் கழிந்தபின், இப்போதும் பல்லாயிரக்கணக்கில் விற்பனையாகிக் கொண்டிருக்கின்றது.

நான் கனடாவில் உயர்கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தபோது எங்களுக்கு இந்த நாவலும், ஹார்பர் லீயின் To Kill a Mockingbirdம் பாடத் திட்டத்தில் இருந்தன. எங்கள் ஆசிரியர் ஹார்ப்பர் லீயைத் தெரிவு செய்ததால் நாங்கள் To Kill a Mockingbird-ஐ வாசித்தோம். இப்போது ஹர்ப்பர் லீயின் நாவலும் கேள்விக்குட்படுத்தப்படுகின்றது. அமெரிக்கக் கறுப்பினத்தவர்களை காக்க வந்த ஒரு மீட்பராக அதில் வெள்ளையின Atticus Finch என்ற பாத்திரம் சித்தரிக்கப்பட்டிருப்பது குறித்து கேள்வி எழுப்பப்படுகின்றது. கிட்டத்தட்ட 20 இடங்களில் மேல் கறுப்பினத்தவர்களை இழிவுசெய்யும் 'N' வார்த்தை பாவிக்கப்பட்டதை, 9/10ஆம் வகுப்பு மாணவர்கள் வாசிப்பு சரியா என்று சர்ச்சைகளும் போய்க் கொண்டிருக்கின்றன.

ஹார்ப்பர் லீ என்ற வெள்ளையினப் பெண்மணி, Scouts என்கின்ற ஒரு வெள்ளைச் சிறுமி வயதுக்கு வருகின்ற பார்வையினூடு இதை எழுதினாலும், அந்தக் காலத்தில் இருந்த நிறவாதத்தை இனங்காட்டிய ஒரு முக்கியமான நாவல் என்பதில் மாற்றுக் கருத்தில்லை. இந்நாவல் 1960களில் வெளிவந்தாலும், 1930 காலகட்டத்தைப் பிரதிபலிக்கின்றது. எனவே, அந்தக் காலகட்டத்து உலகத்தைத்தான் ஹர்ப்பர் லீ பிரதிபலித்தார் என்பதும் சரியே. ஆனால், அதேசமயம் ஒடுக்கப்பட்ட மக்கள், நெடுங்காலமாக அடிமையாக்கப்பட்ட ஒடுக்கப்பட்டவர்களின் வலிகளும் குரல்களும் முக்கியமானதே.

ஒடுக்கப்படுவோர் குரல் என்றும் எங்கேயும் பிற எதையும் விட முதன்மை கொடுத்துச் செவிமடுக்க வேண்டியவை. இன்றைக்கு இந்த ஆங்கிலேய நாடுகளில் (அமெரிக்கா, கனடா, இங்கிலாந்து, ஆஸ்திரேலியா) கறுப்பின / பூர்வீக மக்கள்



ஜே.டி.சாலிஞர்



ஹார்ப்பர் லீ

ஏற்கனவே நடத்திய பெரும்போராட்டங்களால்தான், எங்களைப் போன்ற மண்ணிற மக்கள் ஓரளவுக்குச் சுதந்திரமான மனிதர்களாக இந்த மேற்கத்தைய நாடுகளில் வாழ முடிகின்றது என்பதை நாம் உணர்ந்தால், நாம் யாரின் குரல்களோடு சேர்ந்து ஓங்கி ஒலிக்கவேண்டும் என்பது புரியும்.

சாலிஞ்சரும் 'Catcher in the Rye' எழுதியபின் பெரிதாக எந்த நாவலும் எழுதவில்லை. அதற்கு முன்னர் எழுதிய சில கதைகளைத் தொகுத்து ஒருசிறுகதைத்தொகுப்பும் 'FrannyandZooey' குறுநாவல் + சிறுகதை தொகுப்பும் வெளியிட்டதைத் தவிர வேறு எதுவும் எழுதவில்லை. அதன்பிறகு ஒரு தலைமறைவு வாழ்க்கைக்கு சாலிஞ்சர் போய் விட்டிருந்தார். இப்படி தலைமறைவில் இருந்த சாலிஞ்சரோடு 90களின் நடுவில் ஒரு பெண்ணுக்கு ஏற்பட்ட தொடர்புகளை வைத்து ஒரு நூல் வெளிவந்திருக்கின்றது. அது My Salinger Year.

ஆங்கில இலக்கியத்தில் பட்டம் பெற்ற Joanna Rakoff ஒரு பதிப்பகத்தில் முகவராகச் சேர்கின்றார். அவர்களே சாலிஞ்சருக்கு முகவராக இருப்பதால், ஜோனாவுக்கு சாலிஞ்சரோடு தொடர்புகொள்ளும் சந்தர்ப்பம் வருகின்றது. சாலிஞ்சரின் 1950 நாவலுக்கு, 1990களிலும் பல வாசகர்கள் கடிதம் எழுதிக் கொண்டிருக்கின்றனர். ஆனால், சாலிஞ்சர் தனது தலைமறைவு வாழ்க்கையால் எவரோடும் தொடர்புகொள்வதில்லை. எனவே, அவரது முகவரியையோ தொலைபேசி எண்ணையோ எவருக்கும் கொடுக்கக்கூடாது என்று ஜோனாவின் நிறுவனம் ஜோனாவுக்கு எச்சரிக்கை செய்கின்றது.

இதனால், ஜோனாவின் பெரும்பாலான வேலை, Catcher in the Rye-இற்கு வரும் வாசகர் கடிதங்களை வாசித்துவிட்டு குப்பைக் கூடைக்குள் எறிவதாகும். சிலருக்கு மட்டும், 'உங்கள் கடிதத்திற்கு நன்றி. ஆனால், சாலிஞ்சர் இந்தக் கடித்தை வாசிக்க விரும்பவில்லை' என்று பதிப்பகத்தினூடு ஒரு சிறு கடிதம் மட்டும் அனுப்பி வைக்கப்படுகின்றது.

முன்னதாக எதையும் வாசிக்காமல் குப்பைத் தொட்டிக்கு கடிதங்களை எறிந்த பதிப்பகம், ஒரு அசம்பாவிதத்தின் பின்தான், கடிதங்களை திறந்து வாசித்துவிட்டு குப்பைத் தொட்டிக்குள் எறிகின்றது. அது பீடில்ஸ் இசைக்குழுவின் ஜான் லெலனின் கொலைக்குப் பிறகாகும்.

ஜான் லெனனை சுட்டுக்கொன்ற கொலையாளி தன் கையில் வைத்திருந்தது சாலிஞ்சரின் இந்த நாவலையே. இந்நாவலே தன்னை இப்படி ஜான் லெனனைக் கொலை செய்யத் தூண்டியது என்று ஒரு வாக்குமூலத்தை அந்த கொலையாளி கொடுத்திருந்தார்.

அதன்பின் இந்த பதிப்பகம் சாலிஞ்சருக்கு வரும் எல்லாக் கடிதங்களையும் திறந்து வாசிப்பது

என்று முடிவை எடுக்கின்றது. ஒருபோதும் எந்தக் கடிதத்திற்கும் சாலிஞ்சர் பதில் எழுதுவதில்லை என்கின்றபோதும் தினமும் கடிதங்கள் வந்து கொண்டிருக்கின்றன. ஒருகட்டத்தில் அந்தக் கடிதங்களின் உட்பொதிந்திருக்கும் சுவாரசியமான விடயங்களால், பதிப்பகத்திற்குத் தெரியாமல் ஜோனா பதில் கடிதங்களை இரகசியமாக எழுதத் தொடங்குகின்றார். சாலிஞ்சரோடு தொலைபேசியில் அவ்வப்போது பேசும் ஜோனாவின் எழுத்தாளராகும் கனவைக் கண்டு சாலிஞ்சர் அவரைத் தினமும் முப்பது நிமிடமாவது எதையாவது எழுதும்படி அறிவுறுத்துகின்றார்.

மேலும், 'நீ இந்த அலுவலகத்தில் இருந்து வரும் பிரதிகளை வாசித்து திருத்தங்களைச் செய்யும் ஒருத்தியல்ல, படைப்பாளி என்பதை ஒருபோதும் மறந்துவிடாதே' என்கின்றார். தொழிலில் தேர்ந்து ஒரு சிறந்த எடிட்டராக / முகவராக ஒருகட்டத்தில் வரும் ஜோனா, இந்த வேலையைத் துறந்து தனது எழுத்தாளராகும் கனவைப் பின்தொடர்ந்து போகின்றார். அந்த ஜோனா தன் சொந்த அனுபவங்களை வைத்து எழுதிய நூலே பின்னர் இதே பெயரில் My Salinger Year திரைப்படமாகவும் வந்திருக்கின்றது.

ஆக 1950களில் எழுதப்பட்ட ஒரு நாவல் இன்று 70 ஆண்டுகள் கழிந்த பின்னும் ஏதோ ஒருவகையில் பேசப்பட்டுக் கொண்டிருக்கின்றது.

சாலிஞ்சர் இரண்டாம் உலக மகாயுத்தத்தில் பங்குபற்றியவர். அமெரிக்க உளவுத்துறையில் வேலை செய்தவர் எனவும் சொல்லப்படுகின்றது. இறுதிக் காலத்தில் தனது மகளிடம், 'நீ எவ்வளவு காலம் வாழ்ந்தாலும் உன்னால் எரிகின்ற தசையின் மணத்தை உனது மூக்கிலிருந்து ஒருபோதும் அகற்ற முடியாது' என போரின் கொடும் நினைவுகளில் இருந்து ஒருபோதும் தப்பிவிட முடியாதிருப்பது பற்றிக் கூறியிருக்கின்றார்.

சாலிஞ்சர் இன்னமும் பதிப்பிக்காத இரண்டு நாவல்களை எழுதியிருக்கின்றார் எனவும் சொல்லப்படுகின்றது. 'There is a marvelous peace in not publishing ... I like to write. I love to write. But I write just for myself and my own pleasure' என பதிப்பிப்பதை விட எழுதுவதையே அதிகம் விரும்பிய சாலிஞ்சரின் புதிய நாவல்கள் இனிவரும் காலங்களில் வெளிவரலாம். அப்போது சிலவேளைகளில் இன்னொரு வகையான சலிஞ்ஜரை நாம் அடையாளம் கண்டுகொள்ளவும் கூடும்.

மனிதர்களாகிய நாம் உதித்தும் மறைந்தும் போய்க் கொண்டிருக்கின்றோம். ஆனால், சிலரையே இந்த உலகம் நினைவில் நீண்டகாலம் வைத்துக் கொண்டிருக்கின்றது. எழுத்தாளர்களாக இருக்கும் பலர் தனி வாழ்வில் வறுமையிலும் வேதனையிலும் உழலக்கூடும். ஆனால், அவர்களின் படைப்புக்கள் காலம் கடந்தும் பேசப்படும் ஆசிர்வாதத்தையும் எழுத்தே அவர்களுக்கு மனமுவந்து அளிக்கவும் செய்கின்றது.

Dead Poets Society திரைப்படத்தில் ஆசிரியரான ரொபின் வில்லியம்ஸ் தனது மாணவர்களுக்கு ஏற்கனவே அந்தப் பாடசாலையில் படித்தவர்களின் கறுப்பு -வெள்ளைப் புகைப்படங்களை ஓரிடத்தில் காட்டுவார். இவர்கள் உங்களைப் போல இதே பாடசாலையில் 30 வருடங்களுக்கு முன்னர் படித்தவர்கள். என்னதான் முயன்றாலும் இறுதியில் இறப்பென்பது இவர்களைப் போன்று உங்களுக்கும் உறுதியானது. நீங்கள் இதற்கிடையில் எப்படி உங்களுக்கு விரும்பிய மாதிரி வாழப் போகின்றீர்கள் என்பதுதான் முக்கிய கேள்வி. ஆகவே உங்களது கற்பனைகளை, விருப்பங்களை ஒருபோதும் சமரசம் செய்யாதிருங்கள் என வில்லியம்ஸ் சொல்வார். அதற்கேற்ப கவிதைகளைப் பற்றிக் கற்பிக்கும்போது பாடப்புத்தகத்தில் இருக்கும் கலாநிதி ஒருவர் எழுதிய முன்னுரையை கிழித்துவிடுங்கள் எனச் சொல்லி குப்பைக்கூடையை ஒவ்வொரு மாணவரிடம் நீட்டியபடி போவார்.

மாணவர்கள் தமது ஆசிரியரின், மாணவ காலத்தை பழைய Year Book ஊடு கண்டுபிடிக்கும்போது, அவர் இரகசியமாக Dead Poets Society என்ற பெயரில் நடத்திய இலக்கியக் குழுவைக் கண்டுபிடிக்கின்றனர். அந்தக் குழுவின் கூட்டங்களை எப்படி கடந்தகாலத்தில் தேரோவின் 'நான் காட்டுக்குள் போனேன், ஏனென்றால் நான் உள்ளுணர்வோடு வாழ விரும்பினேன். வாழ்க்கையை அதன் (என்பு) மச்சை வரை உறிஞ்சி ஆழமாக வாழ விரும்பினேன்' எனச் சொல்லித் தொடங்குவார்களோ அப்படி இந்த மாணவர்களும் சொல்லி உற்சாகத்துடன் கவிதைகளைக் கொண்டாடத் தொடங்குகின்றார்கள். இப்படி Dead Poets Society என்ற பெயரை வைத்து கவிதைகளை ஆராதித்தது மாதிரி, ரொபர்தோ பொலானோவின் நாவலான Salvage Detectives பதின்மர்கள் தொடங்கும் கவிதைக் குழுவின் பெயர் Visceral Realists என்பது நமக்கு நினைவுக்கு வரலாம்.

ஒவ்வொருவருக்கும் வாழ்வைத் தேர்ந்தெடுக்கும் சுதந்திரம் இருந்தாலும், நாளாந்த வாழ்க்கை என்பது பெரும்பாடாக அலைய வைக்கின்றது. கிருஷ்ணன் நம்பி 60களில் எழுதிய கதையான 'தங்க ஒரு..'-வில் வருகின்றவன் ஒரு வீட்டை வாடகைக்குத் தேடி அலைகின்றான். கிராமத்திலிருக்கும் அவனது மனைவியும் குழந்தையும் இவனோடு சேரந்து வாழ நகரத்துக்கு வர விரும்புகின்றார்கள். வாரத்துக்கு இரண்டு மூன்று கடிதங்கள், எப்போது நாங்கள்







வருவதென மனைவி கேட்டபடி இருக்கின்றாள். இவனின் குமாஸ்தா வேலையில் வரும் சம்பளத்தில் ஒரு உரிய வாடகை வீட்டைக் கண்டுபிடிக்க முடியாதிருக்கின்றது.

அப்போதுதான் 'ஒரு காலணிக்குள் வாழும்' ஒரு மனிதனை தேனாம்பட்டையில் இவன் சந்திக்கின்றான். அந்தக் குள்ள மனிதன் ஒரு காலத்தில் போலீஸாக இருந்தவன். அவன் நகரம் கொடுக்கும் நெருக்கடிகளால் சிறிது சிறிதாக குள்ளமாகி, அவனின் போலீஸ் காலணிக்குள்ளேயே குடும்பத்துடன் வாழ்கின்ற ஒருவனாக மாறிவிட்டான் என்று அந்தக் கதை நீளும்.

மனிதர்களுக்கு இந்த வாழ்க்கை கொடுக்கும் நெருக்கடிகளால் எவ்வாறெல்லாம் மனிதன் பரிமாணம் அடைகின்றான் என்பதுதான் கதை. அதில் ஓரிடத்தில், 'எதையும் கடைசி வரைத் தெரிந்துகொள்ளும் அக்கறை உள்ளவளாயிற்றே நீ. ஆனால், உலகத்தில் எதையும் கடைசி வரைத் தெரிந்துகொள்ள முடியாது என்பதை மீண்டும் உனக்குச் சொல்லுகிறேன். கடைசி என்பதெல்லாம் வெறும் மயக்கம்' என்று கதைசொல்லி தன் மனைவிக்கு கடிதம் எழுதுவார்.

இந்தக் 'கடைசி வரை தெரிவது தோற்ற மயக்கம்' ஆக இருப்பது போலத்தான் நமது கைகூடாத ஆசைகளும் இருக்கின்றன. அவை கைகூடும்போது நமக்கு அதை ஆறுதலாக இருந்து அனுபவிக்க முடியாதபடி இன்னொரு ஆசை சிறகு விரித்துத் தொடங்கி விடுகின்றது. ஆக கடைசி என்ற ஒன்றுமே இல்லாது. மேலும் மேலும் பெருகிக் கொண்டிருப்பதற்கு எப்படி ஒரு எல்லை வகுத்துவிட முடியும்?

ஆனால், இந்த எளிய உண்மையை Promised Land திரைப்படத்தில் லெமன் ஜூஸ் விற்கும் ஒரு சிறுமி உடைத்து விடுகின்றாள். ஒரு சிறு கிராமத்தில் இயற்கை வாயு கிடைக்கின்றது என்று அறிந்து ஒரு பெரிய நிறுவனம் தனது சார்பாக ஒருவனை அங்கே அனுப்புகின்றது. அவனது பணி, அந்த மக்களை நிலத்தினடியில் இருக்கும் இயற்கை வாயுவினால் அவர்களுக்கு பெரும் பணம் கிடைக்கப்போகிறதெனச் சொல்லி அவர்களின் விவசாய நிலங்களை அவர்களிடமிருந்து வாங்குவது/ குத்தகைக்கு எடுப்பது. இறுதியில் தனது நிறுவனத்தின் தகிடுதித்தங்களை விளங்கி அந்த மக்களுக்கு உண்மையை உரைக்கப் போகும் அவன் இந்தச்

சிறுமியிடம் லெமன் ஜூஸ் வாங்கிக் குடிப்பான்.

அவன் அந்த ஜூஸின் பணத்தை விட (25 சதம்), அதிக காசை அந்தச் சிறுமிக்குக் கொடுப்பான். அவள் மேலதிக பணத்தை வாங்க மறுத்து, 25 சதமே போதுமென்பாள். ஒருவகையில் மனிதர்களுக்கு இருக்கும் பணத்தாசை என்பதைவிட, நீங்கள் இந்தப் பூமியை உங்கள் வரம்பிற்கேற்பப் பாவித்துவிட்டு இந்தச் சிறுமியைப் போன்ற அடுத்த தலைமுறையும் அனுபவிக்க விட்டுச் செல்லுங்கள் என அது மறைமுகமாய்ச் சொல்வது போலத் தோன்றியது.

நாம் நமது அளவற்ற ஆசைகளை நம் இருப்பிற்கான அவசியங்களாக ஆக்கி, நம்மையும் எதிர்காலச் சந்ததியையும் நட்டாற்றில் விட்டுச் செல்லும் மிகப் பெரும் நுகர்வோராக மாறிவிட்டோம். இன்னுமின்னும் வேண்டும் என்று நம் வாழ்வைக் கூட நிம்மதியாக வாழமுடியாது, அக / புற அழுத்தங்களினால் நாம் ஓய்வே இல்லாது ஓடிக் கொண்டிருக்கிறோம்.




வசதி வாய்ப்புக்களில் கூடிய / குறைந்த மனிதர்கள் பலரைப் பார்க்கின்றோம். ஆனால், படிநிலைகள் எவ்வாறிருப்பினும் தமக்குள் தீர்க்கமுடியாப் பிரச்சனைகளோடும் ஆசைகளோடும் தான் அநேகர் இருக்கின்றார்கள். இப்படியான பிரச்சினைகளோடு வாழ்வதில் மட்டும் நாம் எல்லோரும் 'சமதர்ம' உலகில் வாழ்கின்றோம் என நினைக்கிறேன்.

யதார்த்தவாதக் கதைகளே இப்போது தமிழ்ச் சூழலில் மிகுந்த உணர்ச்சிவசமாக எழுதப்பட்டுக் கொண்டிருக்கின்றது. பிழியப் பிழிய உணர்வுகளைக் கொடுத்தால் அது ஒரு சிறந்த புனைவாக வந்துவிடும் என்பது எழுதப்படாத விதி போலும். பலர் கடுமையாக தீவிர விரதத்தைப் போல அதைப் பின்பற்றிக் கொண்டிருக்கின்றனர்.

யதார்த்தவாதக் கதை என்றாலும் தமிழ் பிரபாவின் 'கோசலை' நல்லதொரு நாவல். அங்கே உணர்ச்சிகளுண்டு, உணர்ச்சி வசப்படுவதற்கான சம்பவங்களும் இருக்கின்றன. ஆனால், தமிழ் பிரபா அதை - மேலே லெமன் விற்கும் சிறுமி போல - வாசகர் புரிந்து அசைபோடுவதற்கான வெளிகளை விட்டுச் செல்வதால் அது மிகு உணர்ச்சியாகவோ அதீத நாடகீயமாகவோ போகவில்லை. ஒருவகையில் கோசலையை கோசலையால் மட்டும் புரிந்துகொள்ள முடியும் என்கின்ற சிக்கலான ஒரு பாத்திரமாக அவர் படைக்கப்பட்டிருப்பார்.

இன்று எழுதப்படும் சிறுகதைகள் இப்படி உணர்ச்சிகளின் நெருக்கடியால் எழுதப்படுவதால், அவற்றை மேல் எழுந்த நுனிப்புல் வாசிப்போடு கடந்து போய்க்கொண்டிருப்பேன். புனைவில் கதையென்று தெளிவாக இல்லாமலே வாசகர் இரசிக்க, அதற்குள் ஊறி நின்று எழுதலாம் என்று ஒருமாதிரியான சட்டகங்களுக்கு எழுதுபவர்களின் தலையில் ஆணியடித்துச் சொல்லலாமோ என்று கூட நினைப்பதுண்டு. புதிதாக எழுதுபவர்களைக் கூட மன்னித்து மறந்துவிடலாம். ஆனால், எழுத்தாளர் என்ற பெயரை அடைந்துவிட்டவர்களுக்கு இந்தச் சிகிச்சை இனிவரும் காலங்களில் அவசியம் என்று நினைக்கின்றேன்.

அந்தவகையில் யுவன் சந்திரசேகரின் அண்மைக்கால கதைகளைத் தொகுத்து வந்த 'கடலில் எறிந்தவை' ஒரு இதமான வாசிப்பு அனுபவத்தைத் தந்தது. கதைகள் கிட்டத்தட்ட கட்டுரைக்கு நெருக்கமான எழுத்து வகையெனக் கூடச் சொல்லலாம். கதைகளில் குறிப்பிட்டுச் சொல்லும்படியான விடயங்கள் இருப்பதில்லை. இந்தத் தொகுப்பிலுள்ள அநேகமான கதைகளில், ஒன்றோ இரண்டோ பக்கங்களில் கதை மாதிரியான ஒன்றைச் சொல்லிவிட்டு, தன் கனவுகளையும் அலையும் மனவோட்டங்களையும்தான் யுவன் பேசுகின்றார். ஆனால், அது அலுக்காத வகையில் எனக்கு சுவாரசியமாகத் தெரிந்தது.

மேலும் ஒரு சட்டகத்துக்கு வெளியே இருப்பதும் ஏதேனும் ஒரு குழுவுக்குள் ஐக்கியம் ஆகாமல் தன்னியல்பிலே இருப்பது என்பதும் சுவாரசியமானது. ஆகவே அந்த உதிரிக் குரல்களை, விதிவிலக்குகளை நாம் தொடர்ந்து பேசுவோம். Dead Poets Society-இல் வந்த ஆசிரியரைப் போல, லெமன் விற்கும் சிறுமியைப் போல, நிறைய வசதிகள் பெருகும் என்றாலும் தனக்கு அறமென நினைப்பதை தயக்கமின்றிச் சொல்லி வேலையிலிருந்து துரத்தப்படும் அந்த Promised Land ஆணைப் போல, நாம் புனைவுகளில் மட்டுமின்றி வாழ்விலும் நம்மைப் புதிதாய்க் கண்டுபிடிப்போம். ●

"இளங்கோ" <elanko@rogers.com>

published by PRABHU THILAAK published at No. 5, 5th Street, Soma sundaram Avenue, Shakti Nagar, Porur, Chennai 600116.
Owned by PRABHU THILAAK. printed by A. Chandran. Printed at Ayyanar offset, No. 10, Subbarao Nagar, Choolaimedu, Chennai 600094.
Editor : PRABHU THILAAK

